உ

சிவமயம்.

# பஞ்சபதமகாவாக்கியம்.

சிதம்பரம்

தெவட சுவாமிகளால்

தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது.

இஃது,

திருமயிலை,

ஸ்வதிலிங்கதேசிகரால்

பார்வையிடப்பட்டுத்

திருத்தணிகை,

சித்தையரவர்களால்


சென்னை,

இந்துவித்தியாநிலைய அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1881.

# விளம்பரம்.



இதனால் யாவர்களுக்கும் அறிவிப்பது யாதெனில் சென்னப்பட்டணம் பெத்துனாயகன்பேட்டை நாராயணமுதலிவீதியில் ௫௨-வது-கதவிலக்கமுள்ள வீட்டிலிருக்கும் திருத்தணிகை, சித்தையரவர்களால் லலித தமிழ் தெலுங்கு புத்தகங்களும் விற்பனைசெய்துகொண்டு வருவதால் வேண்டுபவர்கள் விலைகொடுத்து பெற்றுக்கொள்ளலாம்.



உ

சிவமயம்.

# பஞ்சபதமகாவாக்கியம்.

## குருஸ்துதி - வெண்பா.

நிற்குணனாய் நித்தியனாய் நின்மலனாய் நிச்சலனாய்
சற்குருவே யானசௌ பாக்கியனை—மற்புதனை
வாக்குத்துதிக்க மனநினைக்க வென்சிரத்தி
லாக்கவவன் பொற்பதமே யாம்.

## நூல்வரலாறு.

ஸ்ரீ கயிலாசபதியாகிய தக்ஷிணாமூர்த்தியினனுக்கிரஹம் பெற்றுவிளங்கிய சனற்குமாரரிஷி அவர்சிஷ்ய அத்திரிமகாரிஷி அவர்சிஷ்ய அடிசாயகையில்லார் அவர்சிஷ்ய சுவாயம்புவசித்தர் இவர்களனைவரும் ஸ்ரீ கயிலாயத்திலுங்காசியிலுஞ்சஞ்சரித்துக்கொண்டிருக்கிறகாலத்தில் சாந்தபட்டணத்தி லாரியவம்சத்திற் பிறந்த ஆரியனென்பவர் த்யோசித்தராய் வாணியத்துறையிலிருந்து அவிட்டத்திற் பிரமஞானசித்தராயிருக்கிற சிலமகாத்துமாக்களுடன்கூடி வேதாந்த விசாரம் பண்ணிவருகிறநாளில் ஒருநாள் அவ்வாரியர் எழுந்து அவர்களுக்குப் பூசைநமஸ்காராதி சர்வோபசாரமுஞ் செய்து அஞ்சலியஸ்தராய் நின்று ஓய் மகாத்துமாக்களே! நீங்கள் வஸ்துவை விசாரஞானத்தினலறியும்வழிமாத்திரந் திருவுளம்பற்றியருளினீர்கள் இது சிரவண்மன்னமாகியபரோக்ஷமானவபரஞானமன்றிவிஷ்டடர்பூர்வகமா யறிந்தனுபவிக்கின்ற சுவானுபவமாகி

ய அபரோட்சமான பரஞானமல்லவே அந்தச்சுவானு பூதிநிலைமை அடியேனுக்குச் சித்திக்கும்படி கிருபை கூர்ந்தருள்வேண்டுமென்றுபலவாறாகத்துதித்துவிண் ணப்பஞ்செய்தருளினார்.

அதுகேட்ட மகாத்துமாக்கள் அவரைக்கிருபையா கப்பார்த்து ஓய்ஆரியரே! அவ்வாங்மனகோசரமாகியசு கசமாதி நிஷ்டானுபவமுணர்ந்த மகான்கள், கிடைப் பதுந்துர்லபம் அதற்குரிய சாதனசதுஷ்டய சம்பன் னரானவதிகாரிகள்கிடைப்பதுந்துர்லபமென்றுசொல் லியருளினார்கள். அந்தச் சொல்லைக் கேட்டமாத்திரத் தில் ஆரியர் மிகவுமநடுக்குற்று நமக்கு இப்படிப்பட்ட நிலைமை யெப்படிகிடைக்கப்போகிறதென்று வியாகூ லமடைந்து நாம் இந்தநிச்சயத்தை எந்தவகையினாலா வதடைய வேண்டுமென்கிற வைராக்கியத்தை மேற் கொண்டு தாமிருக்கும் வாணிபத்துறைக்குத் தமது புத்திரர்களை வைத்துவிட்டுக் கங்காநதிசூழ்ந்த காசி பட்டணமேபோய் விசுவநாதருடைய ஆலயத்திற் புகுந்து பன்முறை வணங்கிநின்று அப்பால் மகாராஜ ராஜ பரமேஸ்வரியாகிய விசாலாட்சி யம்மையாரை யுபாசித்து அந்தமகாதேவிக்குத் திரிகாலமும் சுகந்தாதி புஷ்பமாலிகை தூபதீபநைவேதனமுதலிய சர்வோபசாரங்களும் வழுவாதுநடத்திக்கொண்டு தினந் தோறும் பூசைமுடிந்தபின் பூமியைச்சதுரமாய்மெழுகி அதிலிருந்து மாமுதலிய வகாரங்களையுண்டுமென் றுவருடபரியந்தம் அல்லும்பகலும் அஃதே சிந்தனை யாய் மகாவைராக்கியத்துடன் அந்தச்சந்நிதானத்தில் வசித்திருந்தார்.

இப்படியிருக்க ஒருநாள் மகாதேவியார் திருவுள மிரங்கி அப்பா ஆரியா! நீயிருக்குமிடத்திற்குப்போ

ஞலவிடத்தி லுனக்குவேண்டியவரங் கிருபைசெய்கி ரேமென்று அசரீரியாய்க்கட்டளையிட்டருள அதைக் கேட்ட வாரியர் வியாகூலநீங்கி மனமகிழ்ச்சியடைந்து மகாபாக்கியம் மகாபாக்கியமென்றெழுந்து பலமுறை வணக்கிப் பிரதட்சணநமஸ்காரஞ்செய்து விசாலாட் சித்தாயாரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு விசுவநா தாசந்நிதியையும் வணங்கிக்கொண்டு வெளியேபுறப் பட்டுத்தம்துவாசஸ்தலத்தைநோக்கிநடந்துவருமார்க் கத்தில் ஒருசோலையுந் தடாகமுங்கண்டு மகா சந்தோ ஷத்துடன் அந்தச்சோலையிலிறங்கி ஆயாசநீங்கி அனு யாசமாய் சுயம்பாகஞ்செய்துவைத்து அனுஷ்டான திக்கிரியைகளைமுடித்துக்கொண்டுதாம் அமுதுகொள் ளவேண்டி அதிதிபிட்சைக்கு அமுதெடுத்துவைக்குந் தருணத்தில் மகாதபோதனராகிய ஒருவிருத்தர் அவி டத்திற்கெழுந்தருளினார்.

அங்ஙன மெழுந்தருளிய மகாத்துமாவை ஆரியர் கண்டுவணங்கி தேவரீரிந்த வமுதைக் கொள்ளுமென் று பிட்சையையவர்கையிற்கொடுக்க அவர் பிட்சையை வாங்கிக்கொண்டு தம்துகையிலிருக்குந் திருமுறையை ஆரியர்கையிற் கொடுத்துவிட்டு அமுதுகொண்டருளி வருகிறோமென்று தடாகக்கரையேபோய் மறைந்தரு ளினார்.

அப்பால் ஆரியர் மகா சந்தோஷகரமாய் போச னஞ்செய்து பின்பு தடாகக்கரையில் அதிதியைக்கா ணமையால் எங்குந்தேடித்திரும்பிவந்து அந்தத் திரு முறையை அவிழ்த்துப்பார்த்தருளினார். அது மகா வாக்கிய சம்பிரதாயமாயிருந்தது அதைக்கண்டு ஆரி யர் மகா ஆனந்தத்துடன் அதைப் பிராணதாரமாய்க் கைப்பற்றிக்கொண்டு தமது வாசஸ்தலத்திற்குவந்து

சேர்ந்து சார்வதா அந்தத்திருமுறையைச்சிந்தித்துக் கொண்டிருந்தார்.

அப்படியிருக்கச் சிலநாள்சென்றபின்பு இந்தத்தி ருமுறையிற்சொல்லுகிற நிஷ்டானுபூதி நமக்கனுப வமாகும்படி சந்தேகவிபரீதமின்றிப் போதிக்கவல்ல ஆசாரியனையறிந்து சரணாகதியடையவேண்டுமென் கிற தாகத்துடன் புறப்பட்டுச் சற்குருவைத் தேடி முன்போலவே காசிக்குப்போய் விசாலாட்சியம்மை யார் சந்நிதானத்திற் சிலநாள்வசித்திருந்தார். அப்ப டியிருக்க அவர் ஒருநாள் மத்தியானவேளையில் ஸ்நா னஞ்செய்யும்படி மணிகர்ணிகைக்கரைக்குவந்து அங் கேமுன் திருமுறைகொடுத்த மகாத்துமாவெழுந்தரு ளியிருக்க அவரைக்கண்டுவணங்கி ஓய்சுவாமி! தேவ ரீரித்தனைநாளா யெங்கே மறைந்தருளியிருந்தீர் இப் போது தேவரீரைக்கண்டவளவில் அடியேன்கவலையெ ல்லாம் விமோசனமாயிற்றென்றுபலவாறுகஸ்தோத் திரஞ்செய்தருளினார். அதைக்கேட்டமகாத்துமாவும் அப்பா! நாம் நெடுநாளாய் இந்தஸ்தலத்தில்தான் கு டும்பவாசமாயிருக்கிறோம் நமதுதேவியும் உன்னை ம கா தபோசித்தனென்று பலகாலுஞ் சந்தோஷமாகச் சொல்லிவருவாள் நாமும் அப்படியே யுன்னைக்குறித் துப் பலகாலமுஞ் சந்தோஷப்படுவோம் நாம் முன்பு உன்கையிற்கொடுத்ததிருமுறை யெங்கேயென்றுகேட் டருள, அதைக்கேட்ட வாரியார் ஓய்சுவாமீ! கிருபா நிதீ! தேவரீரை உடனே யெங்குந் தேடிக்காணாமல் மயங்கிப் பிற்பாடு என்வாசஸ்தலம் போய்ச்சேர்ந்து சிலகாலம் இந்தத்திருமுறையைச் சிந்தித்துப்பார்த்து அதன்பொருளை யுணராமல் அதைக் கரதலாமலகம் போ லுபதேசிக்கவல்ல வாசிரிய ரெங்கே கிடைக்கப்

போகிறுரென்று எங்குந்தேடிக்காணமல் இந்தஸ்தலத்திற் கிடைப்பாரென்னும் உறுதியுடன் சிலகாலமாயிருக்கும்போது இந்தநாள் தேவரீரை இவ்விடத்திற் கண்டேன் ஆதலால் தேவரீரே என்கோரிக்கையை நிறைவேற்றி யிரட்சிக்கவேண்டுமென்று மகா பயபக்தி விசுவாசத்துடன் அநேகநமஸ்காரஞ்செய்து ஓய் கருணிதீ! ஞானநேத்திரத்தாற் றெரிசிக்கத்தக்க தேவரீரை ஊனநேத்திரத்தாற் றெரிசித்தேனென்றுபலவாறுகக்கொண்டாடி என்னைச் செனனமரண சாகரத்திலழுந்தாமல் பரிபூரண கடாட்சம் வைத்தருள்வேண்டுமென்று அஞ்சலியஸ்தராய் விண்ணப்பஞ் செய்து நின்றுர்.

அதைக்கண்ட ஸ்ரீ விசுவேசுராகிய மகாத்துமாவும் நீபயப்படாதேயென்று அபயஹஸ்தங் கொடுத்தருளி அப்பா! நீ முத்திமண்டபத்திற்குப்போய் அவ்விடத்தில் திகம்பரராய் விதேககைவல்லிய முத்தராய் நிஷ்டானுபவகேவல அந்தர்முக விலாசராயிருக்கின்ற சுவாயம்புவரிஷியைக்கண்டு அவரைச் சரணமடைந்தால் அவர் உனக்கு ஸ்வரூபஜெனனிய ஞானநிற்சமாதிசாட்சாத்கார வுண்மையை அனுக்கிரகிப்பாரென்று திருவாய்மலர்ந்தருள, அதுகேட்டவாரியர் சந்தோஷித்தராய் சுவாமி! இந்தப்பாதகன்பொருட்டாய் முத்திமண்டபத்தி லெழுந்தருளியிருக்கிற மகாரிஷிசுவாமிகள் திருவுளம்பற்றியருளுமோ அருளாதோ அதற்கு தேவரீருத்தரவானல் அனுக்கிரகித்தருளுமென்று மகாவிநயத்துடன் விண்ணப்பஞ்செய்ய அதற்குமகாத்மாவும் அப்பா! நாம் அப்படியே அவருக்குஉன்தீவிரதர பக்குவத்தைத்தெறிவித் துனக்கனுக்கிரகஞ் செய்யும்படி யுத்தரவுசெய்கிறேம் அவர் அப்படியேயுனக்

கனுக்கிரகஞ்செய்வார் பிற்பாடு நாம் உன்கையிற்கொடுத்திருக்கிற திருமுன்றயைப் பதனமாய் நீயே வைத்துக்கொண்டு உன்னைப்போன்ற பக்குவர்களுக்கெல்லாம் நீயனுக்கிரகஞ்செய் அபக்குவர்களுக் கனுக்கிரகஞ்செய்யாதே அப்படி பக்குவாபக்குவம் விசாரியாமலனுக்கிரகஞ் செய்தால்இக பாதகனைப் போவாயென்று திருவுளம்பற்றியருள, அதுகேட்ட வாரியர் அந்த வசனத்தை மகாப்பிரசாதமென்று சிரசா வகித்துக்கொண்டு ஓய் சுவாமீ! தேவரீரிருக்கும் ஸ்தலத்தையும் தேவரீரது பத்தினியாகிய தேவியாரையுந்தெரிசிக்கும்படி கிருபை செய்யவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தார்.

அதுகேட்ட விசுவேசரும் அப்பா! நல்லது வாவென்று ஆரியரைத் தம்மோடழைத்துக்கொண்டு விசாலாட்சி யம்மையார் சந்நிதிக்குப்போய் இதுதான் நமதுகிரகம் இவள்தான் நமதுதேவியென்று திருவாய் மலர்ந்து அந்தர்த்தியானமாய் மறைந்தருளினார்.

அப்பால் ஆரியர் அவ்வதிசயத்தைக்கண்டு திகைத்துநின்று வேதவேதாந்தசொரூபா! விசுவேஸ்வரா! சமஸ்தஜகதாதாரா! சரவலோகசரண்யா! ஜகத்ரக்ஷகா! வென்று பல்வாறாகத் தோத்திரஞ்செய்து ஓய் சுவாமீ! தேவரீரது திருப்பாதம்வருந்தப் பாவியேன் பொருட்டு பூமியின்கண் ணெழுந்தருளிவந்தகருணைக் கென்ன கைம்மாறு செய்வேனென்று பித்தேறினவர் போல விசாலாட்சியம்மையார் சந்நிதானத்திற்கும் மணிகர்ணிகைக் கரைக்குமாய் புரண்டு புரண்டு மருண்டுமருண்டு விழுந்தழுது தேகாதிப்பிரபஞ்சத் தோற்றரவின்றி யுன்மத்தங்கொண்டு திரிகிறநாளில் ஸ்ரீ விசுவநாதசுவாமியும் ஒரு வயோதிகப் பிராமணசந்நியாசி

போலத் திருவுருக்கொண்டு சுவாயம்புவமகாரிஷிக்கு முன்பெழுந்தருளிவந்து ஓய்சுவாயம்புவமகாரிஷியே! நேத்திரத்திரிசியத்தைமேனோக்கிக்கொண்டு நன்றாய்த்தம்பேரால் நிமிர்ந்துகிடக்கின்றாய் புரண்டுவிழுந்து பித்தாய்த்திரிகிறவனைப்பார்த்து ஆதரித்து உனக்கென்ன வேண்டியதென்றுகேட்டால் பழுதோ, சிவகாருண்யத்திலுஞ் சமாதியதிகமோ, இனியாகிலும்போய் அவனையாதரித்து அவனுக்கிந்தச் சமாதிநிலைமையை யுபதேசஞ் செய்யென்றுசொல்லி மறைந்தருளினார்.

அப்பால் அதைக்கேட்ட சுவாயம்புவமகாரிஷியும் மகா பயங்கரத்துடன் நடுக்கங்கொண்டு திடலென்றெழுந்திருந்து ஆரியரிடத்திற்குவந்து அப்பனே! ஏன் துயரப்படுகிறாய் உனக்குவேண்டிய தேதென்று கிருபையாகக்கேட்டருளினார். அவ்வாரியரும் அந்தவசனமிர்தமானது செவியினிடமாகப் புகுந்தமாத்திரத்தில் மனோவெப்பநீங்கி விஸ்ராந்தியடைந்து ஓய் சுவாமி! தேவரீருடைய தெரிசனமானது வடவாலின்கீழெழுந்தருளியிருக்கின்ற தக்ஷிணாமூர்த்தமே குருமூர்த்தியாயெழுந்தருளிவந்து ஜனனமரணமாகிற துக்கசமுத்திரத்தில் அழுந்திக்கிடக்கின்ற அடியேனையெடுத்துஞானமிர்தத்தினால் நனைத்து ஸ்வஸ்வரூபானந்தவதி சிதனமாக்கிக் கரையேற்றினதுபோ லிருக்கின்றதென்று சாஷ்டாங்க தண்டம்பண்ணி இரண்டு திருவடித்தாமரைகளையும் ஆனந்தபாஷ்பத்தினா லபிஷேகஞ்செய்து நாத்தழுதழுக்கத் தோத்திரஞ்செய்து இரண்டு கைகளையுஞ் சிரசின்மேற் குவித்துக்கொண்டு அஞ்சலியஸ்தராய் நின்றருளினார்.

அதைச் சுவாயம்புவ மகாரிஷியுங் கிருபையாகப் பார்த்து அப்பா வாவென்று ஆரியரை முத்திமண்ட

பித்தி லழைத்துக்கொண்டுபோய் உபதேசிக்குமுறை மைப்படி அறியுந்திருவடி அறுதித்திருவடி தீட்சையுஞ்செய்து மகாவாக்கியமாகிய வொருமொழியையும் சமாதிநிஷ்ட்டா சாம்பிரதாயமு மூபதேசித் தருளினார், அங்ஙன முபதேசித்த மாத்திரத்தில் ஆரியரும் அந்தர்முகப்பட்டு ஸ்வஸ்பரூபசமாதியடைந்து அங்ஙனே நெடுநாளிருந்து பின்பு சொரூபாகாரமாகவே சமாதியினின்றும் விழித்து எதிரேகண்ட குருசுவாமிகளது உபயசாரணாரவிந்தங்களைப் பூசித்துத் தமது உடல் பொருள் ஆவி மூன்றையும் குருசந்நிதானத்தில் தத்தஞ்செய்தருளினார்.

அதுகண்டு சுவாயம்புவ மகாரிஷியும் அவ்வாரியருக்குப் புஷ்பகிரிசுவாமிகளென்று தீக்ஷாநாமங் கொடுத்து அப்பா கோதாவிரிக்கரையில் சோமஸ்கந்தமென்னுந்தலத்தி லெழுந்தருளியிருக்கும் சோமஸ்கந்தர் நமக்கிஷ்ட்ட தேவதையாகையால் நீ அங்கேபோயிருந் துன்னைப்போலொத்த பக்குவர்களுக்கு இந்தச் சமாதி சாம்பிரதாயத்தை யுபதேசஞ்செய்து ஜீவன் மூத்தனாய் வாழக்கடவாயென்று ஆசீர்வதித்து அங்ஙனமின்றி யபக்குவர்களுக் குபதேசிப்பாயாகில் வியர்த்தமாகிப்போமென்று திருவுளம்பற்றியருளி ஆரியருக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டுச் சுவாயம்புவமகாரிஷியும் ஸ்ரீ கயிலாயத்திற்கெழுந்தருளினார்.

அப்பால் ஆரியராகிய புஷ்பகிரிசுவாமிகள் விசுவநாதனையும் விசாலாட்சித்தாயாரையும் வணங்கிவிடைபெற்றுக்கொண்டு குருவாக்கியப்படி சோமஸ்கந்தமென்னுந்தலத்தி லெழுந்தருளியிருந்து தம்மையடுத்துவந்த பக்குவர்களாகிய பயிர்கள் தழைத்துவளரும்படி ஒரு கைம்மாறும்வேண்டாது மேகம்போல ஞா

ஞமிர்தத்தைச் சதாகாலமும் வருஷித்துக்கொண்டிருந்தது.

அவர்சீஷர் சாந்தோக்கியசுவாமிகள், அவர்சீஷர் பிறவாநெறிசுவாமிகள், அவர்சீஷர் நிரவயவதேவசுவாமிகள், அவர்சிஷர் சையோகசுவாமிகள், அவர்சிஷர் தேவகதிர்சுவாமிகள், அவர்சீஷர் பிரம்மானந்தசுவாமிகள், அவர்சீஷர் அமிர்தானந்தசுவாமிகள், அவர்சிஷர் சௌபாக்கியசுவாமிகள், அவர்சிஷர் சிதம்பர மறிவானந்தசுவாமிகள், அவர்சீஷர் சிவயோகஞானதர்மராய சுவாமிகள், அவர்சீஷர் தௌடசுவாமிகள், இவரால் இந்த வேதாகமசமரசஞான பஞ்சபத மகாவாக்கிய சாஸ்திரத்தைக் கீர்வாணத்தினின்று சகலருக்கு மெளிதிலுபயோகமாகும்படி திராவிடத்தில் மொழிபெயர்க்கப்பட்டதென்றறிக.

நூல்வரலாறு-முற்றிற்று.







# பஞ்சபதமகாவாக்கியம்.

## குருஸ்துதி.

### விருத்தம்.

அறிவினிச்சயஞானத்தை யருளியவமுதேபோற்றி
அறிவினிற்சமாதிஞானத் தனுபவந்தந்தாய்போற்றி
அறிவினிற்சகசஞானத் ததுவதுவானாய்போற்றி
அறிவரும்றிவானந்த வருட்டிருப்பாதம்போற்றி.

### வேறு.

ஆதியந்தமிலாதா யானந்தமாகி
யையைந்துபதத்தின்மே லாகிநிற்குஞ்
சோதியொருகுருவடிவா யறிவானந்த
சுவாமியாய்ச்சிதம்பரத்திற் றோன்றியாண்ட
மூதறிவாஞ்சிவயோகி தன்மாய
முருகனுடன்தெளட்சிவ யோகிமோன
நீதநிலையருள்வேதா கமசாரத்தைச்
சொற்றனர்கள்றிவுடைய தெளிவுளோர்க்கே.

## நூல்.

நைமிசாரண்யவாசிகளாகிய ரிஷிகளுக்குச் சூதக மகாரிஷி திருவுளம்பற்றி யருளுகின்றார், ஓய் ரிஷிக ளே, ஸ்ரீ கயிலாசவாசராய் சச்சிதானந்தசொரூபியாய் சாந்தமூர்த்தியாய் கிருபாநிதியாய் சம்சாரசாகரமான

அந்தகாரத்திலழுந்தியே மூழ்கிக்கிடக்கிற சீவர்களைக்க
ரையேற்றி மோக்ஷசாதீத சமரசஞான சிம்மாசனாதிப
திகளாக்குகின்றவராய் குருமூர்த்தியா யெழுந்தருளி
யிருந்த தக்ஷிணாமூர்த்தி சுவாமிகள் அதிபக்குவர்க
ளாய் ஞானதபோ சித்தர்களாய் மோக்ஷதாகிகளாய்
குருபாத நிசபக்தியுடையவர்களாய் காமக்குரோதா
திரஹிதர்களாய் வைராக்கிய வுபரதி யுடையவர்களாய்
சாதனசதுஷ்டய சம்பன்னர்களாய் தீவிரதரபக்குவி
களாய் சத்திநிபாதத்துத்தமர்களாயிருந்த சனகர், ச
னந்தனர், சநாதனர், சனற்குமாரர்களாகிய நால்வருக்
குஞ் சுருதி, ஸ்மிருதி, சமரசபாகம், ஞானசம்பவம்,
ரகசியலோலம், கலியாணசம்பவமுதலான வேதாந்தத்
தையும் மகுடாகமத்திலர்த்தமான சித்தாந்தத்தையும்,
அதுகளிலுண்டான சம்பிரதாய அர்த்தத்தையும், முத்
திபேதங்களையும் அனுக்கிரகித்தருள அவற்றுட்சமய
பேதமும் முத்திபேதமும் ஒன்றுக்கொன்றெவ்வாறு
விரோதமா யிருக்கின்றமையால் அவற்றிற் சந்தேகம்
பிறந்து அந்நால்வரு மகா துக்காக்கிராந்தர்களாய் இந்
தச்சந்தேகத்தைச் சாம்பசிவமூர்த்தியே நிவர்த்திக்க
வேண்டுமென்று நிச்சயித்துக்கொண்டு பரமசிவத்தை
நோக்கி நெடுநாள் தவஞ்செய்தார்கள்.

அதுகண்டு பரமசிவம் கிருபைகூர்ந்து அந்நால்வ
ருக்கும் பிரத்தியட்ச தரிசனங்கொடுத்தருளி ஓய்மு
னிவர்களே நீங்கள் தபசினால் மிகவும் வருந்தினீர்கள்,
இனி உங்களுக்குவேண்டிய வரமேது கேளுங்களென்
று திருவுளம்பற்றியருள அதுகேட்ட முனிவர்களால்

வரும் ஆனந்தபரவசராயெழுந்து ஹரஹரவென்று ஸ்தௌத்தியஞ்செய்து நின்றார்கள். அவர்களுக்குள் சனற்குமாரபகவான் சுவாமியைப்பார்த்து ஓய் மகாதேவா தேவரீர் முன்பு கிருபைகூர்ந்து வேதாகமத்தை யனுக்கிரகஞ்செய்தும் எங்களுக்குச் சந்தேகநிவிர்த்தியாகவில்லை. ஆதலால் இன்னமும் அந்தச்சந்தேகநிவிர்த்தியுண்டாகும்படி சகலவேதாகம சமரசகித்தாந்த சம்புடமாய் சகலசாஸ்திரசம்மதமாய் சகலசிமயத்துக்கு மேகரீதியாய் சகலநிலைக்குமேலானதாய் சமாதிநிஷ்டையி லறிவதாயிருக்கின்ற இரகசியார்த்தத்தை அடியேங்களுக் கனுக்கிரகஞ்செய்து சந்தேகவிபரீதமாகிற சமுத்திரத்தில் மூழ்கிக்கிடக்கிற வெங்களைக்கரையேற்றி யிரட்சிக்கவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தார்.

அதுகேட்டுத் திரிநேத்திரதாரியாகிய பரமசிவனும் அந்தச் சனகாதிகளைக் கிருபையாகப்பார்த்து ஓய் முனிவர்களே இப்போதுங்களுக் குண்டாயிருக்கிற சந்தேகவிபரீத நீங்கும்படி வேதாகமங்களிற் பூர்வபட்சமா யிருக்கிற முத்திமார்க்கங்களாகிய நூற்றெட்டு வாக்கியமும் அவற்றினருத்தமும், நிவிர்த்தியும் சித்தாந்தபட்சமாயிருக்கிற அனுக்கிரக சிரேஷ்டமான மகாவாக்கியமும் உங்களுக்கனுக்கிரகிக்கின்றோம் கேளுங்களென்று முந்தி நூற்றெட்டுவாக்கியங்களைத் திருவாய்மலர்ந்தருளுகின்றார்.

## அவையாவன.

| | |
|---|---|
| மங்களவாக்கியம் | ஜோதிவாக்கியம் |
| ஆதிவாக்கியம் | சரவாக்கியம் |
| சத்தியவாக்கியம் | உத்தரவாக்கியம் |
| சராசரவாக்கியம் | அசபைவாக்கியம் |
| டிண்டிவாக்கியம் | பூவாக்கியம் |
| நேயவாக்கியம் | வால்வாக்கியம் |
| அமோகவாக்கியம் | லோசனவாக்கியம் |
| கார்க்கியவாக்கியம் | லிங்கவாக்கியம் |
| இரட்டைவாக்கியம் | நியந்தரவாக்கியம் |
| கவுணவாக்கியம் | முமூகவாக்கியம் |
| சொர்க்கவாக்கியம் | மயவாக்கியம் |
| வாதவாக்கியம் | வியட்டிவாக்கியம் |
| கரணவாக்கியம் | அமலவாக்கியம் |
| கேசரிவாக்கியம் | சம்பவவாக்கியம் |
| கலுஷவாக்கியம் | சிந்துவாக்கியம் |
| காருடவாக்கியம் | டுண்டிவாக்கியம் |
| ஞானவாக்கியம் | ஏகவாக்கியம் |
| மூத்திவாக்கியம் | தூலவாக்கியம் |
| தந்துவாக்கியம் | சூட்சகிவாக்கியம் |
| அன்வயவாக்கியம் | காரணவாக்கியம் |
| புஷ்கலவாக்கியம் | சிவபரவாக்கியம் |
| விசேஷவாக்கியம் | அயிக்கவாக்கியம் |
| பிரஞ்ஞைவாக்கியம் | சாயுச்சியவாக்கியம் |
| மஞ்ஞைவாக்கியம் | லயவாக்கியம் |
| வியோமவாக்கியம் | தாரதவாக்கியம் |
| அந்தரவாக்கியம் | பராற்பரவாக்கியம் |
| நியதிவாக்கியம் | சித்வாக்கியம் |
| ஊர்த்தவாக்கியம் | ஞானசித்துவாக்கியம் |

கோமளவாக்கியம்
ஆஷபவாக்கியம்
ஷாட்குண்யவாக்கியம்
அமிர்தவாக்கியம்
நிராமயவாக்கியம்
கோவாக்கியம்
வர்க்கவாக்கியம்
சுத்தவாக்கியம்
சேமவாக்கியம்
அதீதவாக்கியம்
சுபாசுபவாக்கியம்
கோளகவாக்கியம்
குய்யவாக்கியம்
மோனவாக்கியம்
ககனவாக்கியம்
வேதவாக்கியம்
கைவல்யவாக்கியம்
நிச்சிந்தவாக்கியம்
தமசுவாக்கியம்
டமரகவாக்கியம்
மைத்திரிவாக்கியம்
வெதிரேகவாக்கியம்
திதிவாக்கியம்
நேதிவாக்கியம்
லட்சியவாக்கியம்
வெகுர்வாக்கியம்
அகண்டவாக்கியம்

கமலவாக்கியம்
வாச்சியவாக்கியம்
சமரசவாக்கியம்
சமஷ்டிவாக்கியம்
நிர்க்குணவாக்கியம்
அபாவவாக்கியம்
நிவிர்த்திவாக்கியம்
மார்க்கவாக்கியம்
அதோரவாக்கியம்
ஆசிரயவாக்கியம்
வாசகவாக்கியம்
நாஸ்திவாக்கியம்
நீலோற்பலவாக்கியம்
கோசரவாக்கியம்
முத்திவாக்கியம்
சம்சயவாக்கியம்
விசிஷ்டவாக்கியம்
சாமான்யவாக்கியம்
நிச்சயவாக்கியம்
சங்காரவாக்கியம்
மஞ்சுவாக்கியம்
ஓம்வாக்கியம்
அம்சவாக்கியம்
சாம்பவிவாக்கியம்
சிட்சைவாக்கியம்

ஆ - ௱அ.

இன்னம் வாக்கியபேதங்க ளனந்தமுண்டு. ஆயினும் இப்போதுங்களுக்குச் சொல்லியவாக்கியங்கள் நாமெடுக்கும் அர்த்தமும் நிவிர்த்தியுஞ் சொல்லுகின்றோம் கேளுங்களென்று பிரமசிவன் திருவுளம்பற்றியருளச் சனகாதிகள் கேட்கத்தொடங்கினார்கள்.

---

வினா — மங்களவாக்கியமாவதென்ன?

விடை — மங்களவாக்கியமாவது, பிரமானந்த சுகத்தை வித்துவான்களைப்போல் துதிக்கின்றதே முத்தியென்பது, அது துதிபரமானபடியாற் கூடாது.

வினா — துதிவாக்கியமாவதென்ன?

விடை — துதிவாக்கியமாவது, பிரமானுபவ சாஸ்திரத்தையும் பிரமசொரூபத்தையும் ஸ்தோத்திரஞ்செய்கிறதே முத்தியென்பது, பிரமசாட்சாத்காரமே முத்தியாகையால் அதுகூடாது.

வினா — சத்தியவாக்கியமாவதென்ன?

விடை — சத்தியவாக்கியமாவது, வாக்கியத்தைத் தவிரப் பொருளில்லையாதலால் வாக்கியமே முத்தியென்பது, அது வாச்சியார்த்தமானபடியினாலும் லட்சியார்த்தமான ஸ்வரூப சித்தியில்லாதபடியினாலுங்கூடாது.

வினா — சராசரவாக்கியமாவதென்ன?

விடை — சராசரவாக்கியமாவது, தாபரசங்கமங்களைச் சிவம் சத்தியாகப் பாவனைசெய்வதே முத்தியென்பது, அது சகுணவுபாதியாகையாற் கூடாது.

வினா — டிண்டிவாக்கியமாவதென்ன?

விடை — டிண்டிவாக்கியமாவது, பந்தங் காரணமாகையால் சிற்சத்தியையுபாசித்து அந்தச்சிற்சத்தி

திருமையின்றிச் சகலபந்தங்களினின்றும் விடுபடுவதே முத்தியென்பது, அது சமாதியனுபவமுண்டாதற்குச் சாதனமாகையாலும்மாயையேவுபாதியிருக்கையினாலும் கூடாது.

வினா= நியமவாக்கியமாவதென்ன?

விடை= நியமவாக்கியமாவது, பிரமவுபாசனையை ஒன்று அஞ்சு முப்பதாயுபாசிக்கிறதே முத்தியென்பது, அது சித்தசுத்திக்குக் காரணமாகையாற் கூடாது.

வினா= அமோகவாக்கியமாவதென்ன?

விடை= அமோகவாக்கியமாவது, சர்வவிஷயத்திலுமவாவற்றிருப்பதே முத்தியென்பது, அது வைராக்கியமாகையாற் கூடாது.

வினா= கார்க்கியவாக்கியமாவதென்ன?

விடை= கார்க்கியவாக்கியமாவது, உபக்கிரமவப்பியாசமேமுத்தியென்பது, அது விசாரஞானமாகையாற்கூடாது.

வினா= இரட்சைவாக்கியமாவதென்ன?

விடை= இரட்சைவாக்கியமாவது, பிரமானுசந்தானமே முத்தியென்பது, அது பரோட்சஞானமாகையாற் கூடாது.

வினா= கவுணவாக்கியமாவதென்ன?

விடை= கவுணவாக்கியமாவது, கிருதவுத்தேசமே மோட்சமென்பதுபோல்ச் சிரவணமே முத்தியென்பது, அதற்குமேற் சாட்சாத்காரபரியந்தம் நான்குபடியொழுங்கிருக்கின்றமையால் அது கூடாது.

வினா= சொர்க்கவாக்கியமாவதென்ன?

விடை= சொர்க்கவாக்கியமாவது, வஸ்துசத்தியமாகவுண்டென்று பரோட்ச அவாந்தரவாக்கியமாய் நினைத்திருப்பதே முத்தியென்பது, அது அப

ரோட்சஞான விக்ஷணமல்லாதபடியினால் அது கூடாது.

வினா= வாதவாக்கியமாவதென்ன?

விடை= வாதவாக்கியமாவது, யதார்த்தவசனத்தை விட்டு வாதி கருத்துக்கேற்கச் சொல்லுவதே முத்தியென்பது, அது யதார்த்தமாகையாற் கூடாது.

வினா= கரணவாக்கியமாவதென்ன?

விடை= கரணவாக்கியமாவது, சார்வதா அத்தியாத் மீகத்தைச் சுரோத்திரவழியாகக்கொண்டு பிரமானந்தமனுபவிப்பதே முத்தியென்பது, அது சிரவணமாகையாற் கூடாது.

வினா= கேசரிவாக்கியமாவதென்ன?

விடை= கேசரிவாக்கியமாவது, பால் தயிரானதுபோலப் பிரமமே பிரபஞ்சமாய்த் தோற்றுகிறபடியால் பிரபஞ்சத்தையும் பிரமமாகப் பாவித்திருப்பதே முத்தியென்பது, அது பரிணாமபட்சமாகையாலும் பிரமத்திற்குப் பரிணாமதோஷம் வருகிறபடியாலுங் கூடாது.

வினா= கலுஷவாக்கியமாவதென்ன?

விடை= கலுஷவாக்கியமாவது, பிதாவினிடத்திற் பிள்ளையுண்டானதுபோலப் பிரமத்தினிடத்திற் பிரபஞ்சமுண்டென்றறிகிறதே முத்தியென்பது, அது ஆரம்பபட்சமாகையினாலுஞ் சித்திலும் பத்தியில்லாதபடியினாலுங் கூடாது.

வினா= காருடவாக்கியமாவதென்ன?

விடை= காருடவாக்கியமாவது, பழுதையிற் பாம்புண்டானதுபோலப் பிரமத்திற் பிரபஞ்சமுண்டென்றறிவதே முத்தியென்பது, அது விவர்த்தபட்சமாதலாலும்பிரகிருதிக்குமுன் சீவனில்லாதபடியினாலுங் கூடாது.

வினா— நியாயவாக்கியமாவதென்ன?

விடை— நியாயவாக்கியமாவது, தேகாதிப்பிரபஞ்சத்தில் ஆசத்திவைத்து நியாயநியாயங்களைவிசாரித்து விரோதத்தைத் தள்ளி அவிரோதத்தைக் கொள்ளுகிறதே முத்தியென்பது, அது கர்த்தா வொருவருண்டென்றும் அவருக்குப்பயந்து நீதியாய் நடக்கவேண்டுமென்றும் வருகிறசித்தவிருத்தி யுண்டாகையினாலும் ஸ்வஸ்வரூபந்தவிரச் சீவேசுர சகத்துமித்தையாகையினாலும் விரோதாவிரோதமில்லாததே வஸ்துவாதலாலுங் கூடாது.

வினா— முக்கியவாக்கியமாவதென்ன?

விடை— முக்கியவாக்கியமாவது, அவாங்மனோகோசரமான வஸ்துவை வசனமாய்ச்சொல்வதே முத்தியென்பது, அங்ஙனமாயின் வசனத்தி லர்த்தத்துவமயமான சீவபாவமிருக்கிறபடியால் அது கூடாது.

வினா— தந்துவாக்கியமாவதென்ன?

விடை— தந்துவாக்கியமாவது, நானாவிதமுத்திகளையும் விசாரித்துத்தனக்கெதில் ருசித்ததோ அதுவே முத்தியென்பது, ஆயின் பெத்தனுக்குப் பிரபஞ்சருசியே முத்தியாகவேண்டுமாகையால் அதுகூடாது.

வினா— அன்வயவாக்கியமாவதென்ன?

விடை— அன்வயவாக்கியமாவது, தேகாதிப்பிரபஞ்சாயிக்கத்தைப்பார்த்து இது வஸ்துவினிடத்திலில்லை காலத்திரயத்திலு மித்தையாரூபமாயிருக்கிற மூலமாயையினா லியங்குமென்றறிகிறதே முத்தியென்பது, அதுபரோட்சமாதலாலும் மாயையும் மாயாகாரியங்களுஞ் சர்வமித்தையாதலாலுங் கூடாது.

வினா— புஷ்கலவாக்கியமாவதென்ன?

விடை— புஷ்கலவாக்கியமாவது, பிரமானுசந்தான வாசனைமாத்திரமாயிருக்கிறதே முத்தியென்பது அது புத்தி விருத்திஞானமானபடியால் கூடாது.

வினா— விசேஷவாக்கியமாவதென்ன?

விடை— விசேஷவாக்கியமாவது, ஏகதேசவிஷயத்திலும் வஸ்து இருக்குமென்றறிகிறதே முத்தியென்பது, பிரமாதிகீட பரியந்தம் கண்ணுக்குள் மணிப்பிரகாசம்போல் விளங்குகின்ற சைதன்ய வஸ்துவாகையினாலும் அவ்வஸ்து ஏகதேசமாகையினாலும் அது கூடாது.

வினா— பிரஞ்ஞைவாக்கியமாவதென்ன?

விடை— பிரஞ்ஞைவாக்கியமாவது, விசாரஞானத்தினால் புத்திவிருத்தி ஞானத்திற்பிறந்த வஸ்து நிச்சயமே முத்தியென்பது, ஆயின் விருத்திஞானத்திற்பிறந்த வஸ்துஜடமாதலால் அது கூடாது.

வினா— மஞ்ஞைவாக்கியமாவதென்ன?

விடை— மஞ்ஞைவாக்கியமாவது, அத்தியாத்மீகசாஸ்திரத்திற் பிரமானந்தவசமாகின்றதே முத்தியென்பது, அது பரோட்சானந்தமாதலாற் கூடாது.

வினா— வியோமவாக்கியமாவதென்ன?

விடை— வியோமவாக்கியமாவது, தீபஜோதிதூமவழியே தீபம்பற்றுவதுபோலப் பிரமத்தியான விருத்திவழியே பிரமம் பிரகாசிக்குமென்றறிவதே முத்தியென்பது, ஆயின் பிரமமென்னுங் கற்பித்தியானம் மித்தையாதலால் அது கூடாது.

வினா— அந்தரவாக்கியமாவதென்ன?

விடை— அந்தரவாக்கியமாவது, பிரமத்தியானமே

முத்தியென்பது, அது சாதனமாதலாற்கூடாது.

வினா — நியதிவாக்கியமாவதென்ன?

விடை — நியதிவாக்கியமாவது, அந்தர்முகமாகிய பிரமத்தியானத்தில் விருத்தி சேட்டாவற்றுநின்றவிடமே முத்தியென்பது. ஆயின் விருத்திவிஷயலயமானபடியினால் அது கூடாது.

வினா — ஊர்த்தவாக்கியமாவதென்ன?

விடை — ஊர்த்தவாக்கியமாவது, பிரமரந்திரமான சகஸ்ராரத்தைச் சோடசகலாப்பிரசாதத்திற் றரிசித்து அமிர்தபானஞ்செய்து ஊழியைக்கடந்து நிற்பதே முத்தியென்பது, அது ஞானத்திற்குச் சாதனமாயிருந்தும் நித்தியவஸ்துவிற் கலவாதபடியினாலும் தியானமார்க்கயினாலுங்கூடாது.

வினா — ஜோதிவாக்கியமாவதென்ன?

விடை — ஜோதிவாக்கியமாவது, நெற்றிக்கண்திறந்து அக்கினிபோலிருக்குஞ் ஜோதிர்மயத்தைத் தரிசித்து அந்தப்பிரகாசத்திற் சகலமுந்தெறிவதே முத்தியென்பது, அது புருவமத்தியத்தியானமாகையாற் கூடாது.

வினா — சரவாக்கியமாவதென்ன?

விடை — சரவாக்கியமாவது, சரசாஸ்திரமறிந்து உசுவாசநிசுவாசமக்கினத்தின் தமோயோகத்திற் சித்திக்கும் வஸ்துவையறிவதே முத்தியென்பது, அது கேவலமக்கினமாகையினாற்கூடாது.

வினா — உத்தரவாக்கியமாவதென்ன?

விடை — உத்தரவாக்கியமாவது, யோகத்தினால் தன்னிடத்தில் உத்தராயன தக்ஷிணாயன காலமறிந்து உத்தராயனத்தில் முப்பத்திரண்டுமாத்திரை பிராணாயாமஞ்செய்து கும்பகத்தினுள் விளங்கும்பொருளையறிவதே முத்தியென்பது, அது சித்தசுத்திக்குக்காரணமாகையாற் கூடாது.

வினா— அசபைவாக்கியமாவதென்ன?

விடை— அசபவாக்கியமாவது, பிராணவாய்வு நிதம் இருபத்தோராயிரத் தறுநூறு பேதமாயிருப்ப இன்றிச் சுபாவமாகவியங்குவதே முத்தியென் பது, அது கிரியமாகையாற்கூடாது.

வினா— பூவாக்கியமாவதென்ன?

விடை— பூவாக்கியமாவது, மண்டலத்திரயமும் தே வதைகளையுந் தரிசித்துச் சந்திரமண்டலத்திற் பதினாறுகலையுந் தரிசிப்பதேமுத்தியென்பது, அ தும ண்டலத்திரயத்தியானமாகையினாற்கூடாது.

வினா— வால்வாக்கியமாவதென்ன?

விடை— வால்வாக்கியமாவது, செந்நெல்வால் நுனி போல இருதயத்திலொளிகாண்பதேமுத்தியென் பது, அது சாமான்னிய யோகமாகையாற் கூ டாது.

வினா— லோசனவாக்கியமாவதென்ன?

விடை— லோசனவாக்கியமாவது, கிரமப்படிபிரமோ பதேசம் பெற்றுக்கொண்டு அவ்வஸ்து தானயி ருப்பதே முத்தியென்பது, அதற்கு குருகுலவா சமும் சிரவண மனன நிதித்தியாசனமில்லாதப டியினாலும் பிரதிபந்த மிருக்கின்றதினாலும் அ துகூடாது.

வினா— லிங்கவாக்கியமாவதென்ன?

விடை— லிங்கவாக்கியமாவது, சூட்சுமசரீர லயமே முத்தியென்பது, அது அவித்தையாபிரக்ஞை யிருக்கிறபடியாற்கூடாது.

வினா— மூழுகவாக்கியமாவதென்ன?

விடை— மூழுகவாக்கியமாவது, தேவாதிப்பிரபஞ்சத் தோற்றமின்றித் தமோமயமாயிருப்பதே முத் தியென்பது, அது ஆவரணகாரியமாகையாற் கூ டாது.

வினா— நியந்தரவாக்கியமாவதென்ன?

விடை— நியந்தரவாக்கியமாவது, ஆரோபமானவித்தையாரகிதமே முத்தியென்பது, அது சர்வஞ்ஞரகிதவஸ்துவாகையாற் கூடாது.

வினா— மயவாக்கியமாவதென்ன?

விடை— மயவாக்கியமாவது,பஞ்சகோசத்தைக்கழித்து அவற்றையறிந்தவறிவுதானுவதேமுத்தியென்பது, அது சங்கோசமாகையாற்கூடாது.

வினா— வியஷ்டிவாக்கியமாவதென்ன?

விடை— வியஷ்டிவாக்கியமாவது, நானுவானகரணத்தில் வெளிப்பட்ட கூடஸ்தானத்தைப் பெறுவதே முத்தியென்பது, சாட்சி ஏகமாகையால் அது கூடாது.

வினா— அமலவாக்கியமாவதென்ன?

விடை— அமலவாக்கியமாவது, அகங்காராதிகளற்றுச் சாட்சிமாத்திரமாயிருப்பதே முத்தியென்பது, அதில் திரிபுடிதோற்றமாகையால் அது கூடாது.

வினா— சம்பவவாக்கியமாவதென்ன?

விடை— சம்பவவாக்கியமாவது, ஆயிரத்தில் நூறும் நூற்றில்பத்தும் பத்திலொன்றும்ஒன்று எல்லாவற்றிலு மிருப்பதுபோல ஸ்தூலத்திற்சூட்சுமமும் சூட்சுமத்திற் காரணமும் காரணத்திற் சிவனும் சிவனில் சாட்சியும் சாட்சி யெங்குமுண்டென்றறிவதே முத்தியென்பது, அது உபசாரமாகையாற் கூடாது.

வினா— சித்துவாக்கியமாவதென்ன?

விடை— சித்துவாக்கியமாவது, திரிகாலஞானதிருஷ்டியுடையதே முத்தியென்பது, அது சர்வஞ்ஞத்வவுபாசனையாலகையாற்கூடாது.

வினா= டிண்டிவாக்கியமாவதென்ன?

விடை= டிண்டிவாக்கியமாவது, மாயாசபளிதப் பிரமந்தானவதே முத்தியென்பது, அதுமாயாவுபாதியிருக்கையாற் கூடாது.

வினா= ஏகவாக்கியமாவதென்ன?

விடை= ஏகவாக்கியமாவது, சச்சிதானந்தப் பிரமத்தைப் பிரதிபர்திக்குந் தற்பதவாக்கியமே முத்தியென்பது, அது லட்சியவஸ்துவை யறியாதபடியினாற் கூடாது.

வினா= தூலவாக்கியமாவதென்ன?

விடை= தூலவாக்கியமாவது, ஈஸ்வர ஸ்தூலசரீரமாகிய அஷ்டமூர்த்திவடிவமான விராட்டுக்குஞ் சீவ ஸ்தூலசரீரத்திற்கும் அயிக்கஞ்செய்வதே முத்தியென்பது, அது நாமரூபமாகையாற் கூடாது.

வினா= சூட்சுமவாக்கியமாவதென்ன?

விடை= சூட்சுமவாக்கியமாவது, சீவேஸ்வர சூட்சுமசரீரவயிக்கமே முத்தியென்பது, அது அவித்தைமாயையிருக்கையாற் கூடாது.

வினா= காரணவாக்கியமாவதென்ன?

விடை= காரணவாக்கியமாவது, அந்தரியாமிக்கும் விசிஷ்டனுக்கு மயிக்கமறிகிறதே முத்தியென்பது, அது சீவத்வமிருக்கிறபடியாற் கூடாது.

வினா= சீவபரவாக்கியமாவதென்ன?

விடை= சீவபரவாக்கியமாவது, சீவேஸ்வரவயிக்கமே முத்தியென்பது, அது அவித்தையாமாயாகாரியமாகையாற் கூடாது.

வினா= அயிக்கவாக்கியமாவதென்ன?

விடை= அயிக்கவாக்கியமாவது, கூடஸ்தரும் பிரமமுமேகமென்றறிவதே முத்தியென்பது, அது குணத்திரயசத்தியிருக்கையாற் கூடாது.

வினா— சாயுச்சியவாக்கியமாவதென்ன?

விடை— சாயுச்சியவாக்கியமாவது, சீவனும் வஸ்துவு மிரண்டற விருப்பதே முத்தியென்பது, அது வேதாளுற்றபோலச்சாதனமாயிருக்கிறபடியால் அது கூடாது.

வினா— லயவாக்கியமாவதென்ன?

விடை— லயவாக்கியமாவது, தத்துவல்யசமாதியே முத்தியென்பது, அது உபசங்காரவ்யாபியாசமா கையாற் கூடாது.

வினா— தாரகவாக்கியமாவதென்ன?

விடை— தாரகவாக்கியமாவது, சகலபிரபஞ்சத்திற் கும் வஸ்து தாரகமென்றறிவதே முத்தியென்ப து, பிரமலட்சணஞ் சத்தாமாத்திர மானபடியி னால் அதுகூடாது.

வினா— பாரற்பரவாக்கியமாவதென்ன?

விடை— பாரற்பரவாக்கியமாவது, சுயம் வஸ்துவே யாவரிடத்திலுமிருந் தசைப்பிக்கிறதென்றறிகிற தே முத்தியென்பது, அது அசையாதவஸ்துவா கையாற்கூடாது.

வினா— சித்வாக்கியமாவதென்ன?

விடை— சித்வாக்கியமாவது, சித்வியாபகலட்சணமா யிருப்பதே முத்தியென்பது, வஸ்து லட்சண சூன்யமாகையால் அதுகூடாது.

வினா— ஞானசித்துவாக்கியமாவதென்ன?

விடை— ஞானசித்துவாக்கியமாவது, சர்வமுஞ் சித் ரூபவிலாசமா யனுபவிக்கின்றதே முத்தியென்ப து, அதுவிருத்திதாதாத்மியமாகையாற்கூடாது.

வினா— கோமளவாக்கியமாவதென்ன?

விடை— கோமளவாக்கியமாவது, சர்வானந்தமும் பி ரமானந்தமாயனுபவிப்பதே முத்தியென்பது, அ து விருத்தியானந்தமாகையாற்கூடாது.

வினா= ஆஷபவாக்கியமாவதென்ன?

விடை= ஆஷபவாக்கியமாவது, பிரமானந்தமேமுத்தியென்பது, ஆயின் பிரமானுபவமே மோக்ஷசுகமாகையால் அதுகூடாது.

வினா= ஷாட்குண்யவாக்கியமாவதென்ன?

விடை= ஷாட்குண்யவாக்கியமாவது, ஆனந்தாதீதவஸ்துதானவதே முத்தியென்பது ஆயின் பாவகஞ்சடமாகையால் அதுகூடாது.

வினா= அமிர்தவாக்கியமாவதென்ன?

விடை= அமிர்தவாக்கியமாவது, ஆனந்தசொரூபமே முத்தியென்பது, ஆனந்தாதீதமே வஸ்துவாகையால் அதுகூடாது.

வினா= நிராமயவாக்கியமாவதென்ன?

விடை= நிராமயவாக்கியமாவது, நிராமயஞானரூதமாயிருப்பதே முத்தியென்பது, நிராமயஞானஞ் சிற்சத்திவியாபகமாகையால் அதுகூடாது.

வினா= கோவாக்கியமாவதென்ன?

விடை= கோவாக்கியமாவது லக்ஷணத்தைக்கொண்டு லக்ஷியமறிகிறதே முத்தியென்பது, லக்ஷணநேதிசெய்து வஸ்துவையறியப்படாத படியினால் அதுகூடாது.

வினா= வர்க்கவாக்கியமாவதென்ன?

விடை= வர்க்கவாக்கியமாவது, சிற்சத்திசமேளித சர்வசாட்சி தானவதே முத்தியென்பது, அது சிற்சத்தியுபாதியிருக்கையாற் கூடாது.

வினா= சுத்தவாக்கியமாவதென்ன?

விடை= சுத்தவாக்கியமாவது, பின்னசத்தி அபின்னசத்தியிரண்டுமற்று சுத்தப்பிரமமாயிருப்பதே முத்தியென்பது, ஆயின், சுத்தாசுத்தமின்றிய வஸ்துவென்னும் வாக்கியத்தினால் அதுகூடாது.

வினா— சேமவாக்கியமாவதென்ன?

விடை— சேமவாக்கியமாவது சுத்தமுங்கடந்த சூன்யமே முத்தியென்பது, அதற்குமேற் சுபாவமிருக்கிறபடியால் அது கூடாது.

வினா— அதீதவாக்கியமாவதென்ன?

விடை— அதீதவாக்கியமாவது, உண்டென்றுவிளங்குகிற பிரமத்திற்கும் இல்லையென்கிற பிரபஞ்சத்திற்கும் அப்பாற்பட்ட சுபாவமே முத்தியென்பது, ஆயின் சுயாவாதீதமே வஸ்துவாகையால் அது கூடாது.

வினா— சுபாசுபவாக்கியமாவதென்ன?

விடை— சுபாசுபவாக்கியமாவது, வஸ்து சித்ரூபமுஞ் சட்ரூபமுமாயிருக்குமென்பதை யறிந்து அவ்வறிவு நானுயிருப்பதே முத்தியென்பது, ஒருவஸ்துவுக் கிரண்டுலட்சணை மொவ்வாதாகையால் அதுகூடாது.

வினா— கோளகவாக்கியமாவதென்ன?

விடை— கோளகவாக்கியமாவது, வஸ்துநிச்சயத்தை அதிரகசியமாயறிந்திருப்பதே முத்தியென்பது, வஸ்து சுபானுபவவிளக்கமாகையாற்கூடாது.

வினா— குய்யவாக்கியமாவதென்ன?

விடை— குய்யவாக்கியமாவது, சதசத்தைவிட்டிருப்பதே முத்தியென்பது, ஆயின் நிச்சயத்துக்கிடமின்மையாலதுகூடாது.

வினா— மோனவாக்கியமாவதென்ன?

விடை— மோனவாக்கியமாவது, வஸ்து வாசாமகோசரமாயிருக்குமென்பதே முத்தியென்பது, உபதேசக்கிரமமான ஒருமொழிவாக்கியமிருக்கிறதினுலும் சற்குருவினுலறிவிக்கிற வஸ்துவாகையினுலும் அதுகூடாது.

வினா— ககனவாக்கியமாவதென்ன?
விடை— ககனவாக்கியமாவது, சித்தலயம்பண்ணி ஆகாசவடிவந் தானாயிருப்பதே முத்தியென்பது, அது சமாதிசாதன்மாகையினாற் கூடாது.
வினா— வேதவாக்கியமாவதென்ன?
விடை— வேதவாக்கியமாவது, சர்வதுக்கநிவிர்த்தியே முத்தியென்பது, அது துக்காபாவசாதனமாகையாற் கூடாது.
வினா— நிச்சிந்தவாக்கியமாவதென்ன?
விடை— நிச்சிந்தவாக்கியமாவது, சிந்தனையற்றுத் தானாயிருக்கிறதே முத்தியென்பது, அது மனோசாதனமாகையாற் கூடாது.
வினா— தமசுவாக்கியமாவதென்ன?
விடை— தமசுவாக்கியமாவது, சுழுத்திபோலிருக்கிறதே முத்தியென்பது, பிரமஞானவனுபவமே மோட்சமாகையால் அதுகூடாது.
வினா— கைவல்யவாக்கியமாவதென்ன?
விடை— கைவல்யவாக்கியமாவது, சுத்தசாத்மீகமான மைத்திரியாதிலட்சணமே முத்தியென்பது, அது மயித்திரியாதிலட்சணமெல்லாம் பிரகிருதி விருத்தி தன்மமாகையாற்கூடாது.
வினா— டமரகவாக்கியமாவதென்ன?
விடை— டமரகவாக்கியமாவது, பந்தத்தினாற் பிரபஞ்சத்தில் விரிந்தமனம் சாதனத்தினாற்குவிந்து சாக்கியத்தில் பிரவிர்த்திவழி விரிந்துநிற்பதே முத்தியென்பது, நித்தியானந்த சுகஞ்செனித்தும் சீவன்முத்தி யில்லாதபடியினால் அதுகூடாது.
வினா— மயித்திரிவாக்கியமாவதென்ன?
விடை— மயித்திரிவாக்கியமாவது, சம்சாரசாதனசாத்தீகவிதேகபரியந்தம் சுத்த சாத்தீகவியற்கையாயிருப்பதே முத்தியென்பது, வஸ்துகுணாதீதமாகையால் அதுகூடாது.

வினா— வெதிரேகவாக்கியமாவதென்ன?

விடை— வெதிரேகவாக்கியமாவது, சமஸ்ததேகாதிப் பிரபஞ்சங்களும் நாசமடையுமென்று அதில்பற்றற்று அவிநாசியாகிய வஸ்துவைப் பற்றுவதே முத்தியென்பது;பற்றுதலும்பற்றப்படுகிறதுமாகிய விரண்டுவிதமு மிருக்கையால் அதுகூடாது.

வினா— திதிவாக்கியமாவதென்ன?

விடை— திதிவாக்கியமாவது, சகலதத்துவங்களிலும் வஸ்துவிருந்து மறியாதிருப்பதே பந்தம் அறிந்ததே முத்தியென்பது, தத்துவமிருக்கையினல் அதுகூடாது.

வினா— நேதிவாக்கியமாவதென்ன?

விடை— நேதிவாக்கியமாவது; மனோவிந்திரிய பிராணாதிகளை நேதிசெய்து சேடித்துநின்ற வாத்மாவையறிவதே முத்தியென்பது, வஸ்து அகணிதமாகையாலும் ஏகமேவாத்துவிதம் பிரமமென்னும் வாக்கியத்தினலும் அதுகூடாது.

வினா— லட்சியவாக்கியமாவதென்ன?

விடை— லட்சியவாக்கிய மாவது, பிரமலட்சணங்கொண்டு பிரமத்தையறிவதே முத்தியென்பது; வஸ்துலட்சணஞ் சூன்யமாகையால் அது கூடாது.

வினா— வெகுர்வாக்கியமாவதென்ன?

விடை— வெகுர்வாக்கியமாவது, வேதாகமசாஸ்திரங்களைத்தும் ஆராய்ந்து அவற்றிற்சொல்லுகிற நிலைகளெல்லாம் ஏகமாய் அவிரோதமாய் சித்தாந்தப்படுத்துவதே முத்தியென்பது, விசேஷவஸ்துவைக் குருமுகமாயறிந்து சர்வோன்னதமான நிலையைப்பெறுவதே மோட்சமென்கையால் அதுகூடாது.

வினா— அகண்டவாக்கியமாவதென்ன?

விடை— அகண்டவாக்கியமாவது, வஸ்து அகண்டமென்றும் பிரபஞ்சங் கண்டமென்றுங் கண்டு சாட்சிமாத்திரமாய் நிற்பதே முத்தியென்பது, சாட்சாத்காரத்தில் இரண்டாம்வஸ்துவும்ஒருப்தியுமில்லாதபடியினால் அதுகூடாது.

வினா— கமலவாக்கியமாவதென்ன?

விடை— கமலவாக்கியமாவது, ஆதித்த சந்நிதானத்தில் பத்மகுசும மலருவதுபோல முத்திதிசையிற் பிரமசந்நிதானத்திற் றிரிபுடிசேஷ்டிக்குமென்றறிகிறதே முத்தியென்பது, வஸ்துவுக்கவஸ்தாத்திரய மின்மையினாலும் சாட்சாத்காரதிசையிற் சச்சிதானந்த லட்சணமும் நசிக்கின்றபடியினாலும் அதுகூடாது.

வினா— வாச்சியவாக்கியமாவதென்ன?

விடை— வாச்சியவாக்கியமாவது, பிரமம் உபாதிகளைவிட்டும் விட்டிடாதென்றறிவதேமுத்தியென்பது, பிரமம் உபாதிரகிதமாகையால் அது கூடாது.

வினா— சமரசவாக்கியமாவதென்ன?

விடை— சமரசவாக்கியமாவது, பிரமத்தைப்போற் சீவனிருக்குமென்று நிச்சயிப்பதே முத்தியென்பது, துவிதமாகையால் அதுகூடாது.

வினா— சமஷ்டிவாக்கியமாவதென்ன?

விடை— சமஷ்டிவாக்கியமாவது, சர்வமுஞ் சத்தாமாத்திரமாய் நிச்சயிப்பதே முத்தியென்பது, மாயையுண்டென்கையால் அதுகூடாது.

வினா— நிர்க்குணவாக்கியமாவதென்ன?

விடை— நிர்க்குணவாக்கியமாவது, குணாதீதவஸ்துவே முத்தியென்பது, அவ்வியத்தமாகையால் அதுகூடாது.

வினா— அபாவவாக்கியமாவதென்ன?

விடை— அபாவவாக்கியமாவது, வாக்கியமெல்லாஞ் சொல்லும் பொருளுமாகவிருக்கும் நாமரூபமெல்லா மித்தையாகையால் நாமரூபகிரதவஸ்துதானயிருப்பதே முத்தியென்பது, வாக்கியத்துக் கனவஸ்தாதோஷம்வருகையால் அது கூடாது.

வினா— நிவிர்த்திவாக்கியமாவதென்ன?

விடை— நிவிர்த்திவாக்கியமாவது, பிரமத்திற்கு மாயாலட்சணமில்லையென்கிறதே முத்தியென்பது, பிரமத்தைத் தவிர மாயை யொன்றுண்டென்பவன் பிரமத்துரோகியென்று சுருதிசொல்லுகையினால் அதுகூடாது.

வினா— மார்க்கவாக்கியமாவதென்ன?

விடை— மார்க்கவாக்கியமாவது, யாதோர் சுபாவானுபவத்தால் மகத்துக்கள் சந்தோஷித்தார்களோ அந்தச்சுவானுபூதிநிலைநிற்பதே முத்தியென்பது, சுவானுபவந் தனக்கின்மையினால் அது கூடாது.

வினா— அதோவாக்கியமாவதென்ன?

விடை— அதோவாக்கியமாவது, பிரமத்திலுற்பத்திக்கிரமமெல்லாமறிந்து சமஸ்தமும்நமதுற்பத்திவிலாசமென்றறிவதே முத்தியென்பது, உபக்கிரமம் உபசங்காரமாகிய விரண்டுமித்தையாகையால் அதுகூடாது.

வினா— ஆசிரயவாக்கியமாவதென்ன?

விடை— ஆசிரயவாக்கியமாவது, பிரமஞானியைக்குணாதீதனென்றும் அதிவர்ணாசிரமியென்றும் இன்னும் பலநாமங்களாற் சுருதி புகழ்ந்துசொல்லுகையினால் அப்பிரமஞானியைத் தரிசிப்பதேமுத்தியென்பது, நாமரூபமெல்லா மித்தையாகையாலும் பிரமஞானிக்கு நம்மாஜ்ஞையாகச் சரீரத்திரயங்களில்லாதபடியினால் அதுகூடாது.

வினா= வாசகவாக்கியமாவதென்ன?

விடை= வாசகவாக்கியமாவது, சுருதிவாக்கியங்களில் விளங்கும்பொருளே முத்தியென்பது, வாக்கியங்கள் மாயாகாரியமாகையால் அதுகூடாது.

வினா= நாஸ்திவாக்கியமாவதென்ன?

விடை= நாஸ்திவாக்கியமாவது, எல்லாமழிகிற சர்வசங்காரகாலத்தி லொன்றுமில்லையென் றறிவதே முத்தியென்பது, பிரமமுண்டென்று விளங்குகிறபடியால் அதுகூடாது.

வினா= நீலோற்பலவாக்கியமாவதென்ன?

விடை= நீலோற்பலவாக்கியமாவது, குணகுணிபோலவஸ்துவுடன் பிரகிருதி சேர்ந்திருக்குமென்றறிவதே முத்தியென்பது, வஸ்து குணாதீதமாகையால் அதுகூடாது.

வினா= கோசரவாக்கியமாவதென்ன?

விடை= கோசரவாக்கியமாவது, வாக்கியத்தைக் கொண்டு பொருள்நிச்சயம்பண்ணுவதே முத்தியென்பது, பிரமம் அகோசரமாகையால் அதுகூடாது.

வினா= முத்திவாக்கியமாவதென்ன?

விடை= முத்திவாக்கியமாவது, பந்த நிவிர்த்தியே முத்தியென்பது, பந்தமுத்தி யில்லாதபடியினால் அதுகூடாது.

வினா= சம்சயவாக்கியமாவதென்ன?

விடை= சம்சயவாக்கியமாவது, பிரமம் அகிர்வஜ்ஞனயமென்றறிகிறதே முத்தியென்பது, பிரமத்திற்கும் மாயைக்கும் ஏகலட்சணங்கூடாதாகையால் அதுகூடாது.

வினா= விசிஷ்டவாக்கியமாவதென்ன?

விடை= விசிஷ்டவாக்கியமாவது, பிரமத்தைப் பிரகிருதி விடாதென்றறிவதே முத்தியென்பது, பி

ரமத்துடன் பிரகிருதிகூடுமென்றுசொல்லுவது கூடாது.

வினா= சாமானியவாக்கியமாவதென்ன?

விடை= சாமானியவாக்கியமாவது, சர்வத்திலும்பிரமமுண்டென்றறிவதே முத்தியென்பது, பிரமத்தைத்தவிரச் சர்வமென்றொன்றில்லை யாகையால் அதுகூடாது.

வினா= நிச்சயவாக்கியமாவதென்ன?

விடை= நிச்சயவாக்கியமாவது, பிரமம் நிச்சயஞானத்தில் விளங்குமென்றறிகிறதே முத்தியென்பது, பிரமம் அசிந்திதமாகையால் அதுகூடாது.

வினா= சங்காரவாக்கியமாவதென்ன?

விடை= சங்காரவாக்கியமாவது, ஞானாக்கினியால் அஞ்ஞானநசிக்கில் பிரமோதயமாமென்றறிகிறதே முத்தியென்பது, காலத்திரயத்திலும்பிரமம் உதயாஸ்தமனரகிதமாய் விளங்குகிறபடியால் அதுகூடாது.

வினா= மஞ்சுவாக்கியமாவதென்ன?

விடை= மஞ்சுவாக்கியமாவது, அஞ்ஞானவாவரணத்தினால் பிரபஞ்சந்தோற்றிருக்கிறதே முத்தியென்பது, அஞ்ஞான வாவரண நிவிர்த்தியே மோட்சமாகையால் அதுகூடாது.

வினா= ஓமவாக்கியமாவதென்ன?

விடை= ஓமவாக்கியமாவது, பிரபஞ்சம் க்ஷணேக்ஷணே தோற்றும்போதெல்லாம் ஞானாக்கினியினாற் சுட்டு ஞானவிலாசமாயிருப்பதே முத்தியென்பது, அதுகர்மபந்தபிராயச்சித்தமாதலாற் கூடாது.

வினா= அம்சவாக்கியமாவதென்ன?

விடை= அம்சவாக்கியமாவது, அம்சபட்சி ஜலத்தை விட்டுப் பாலைக்கிரகிப்பதுபோலப் பிரமஞானி

பிரபஞ்சத்தோடு கூடியிருக்கையிலும், பிரம மாத்திரமாக விளங்குவதே முத்தியென்பது, பிரமஞானிக்குப் பிரபஞ்சமில்லையாதலால் அது கூடாது.

வினா— சாம்பவிவாக்கியமாவதென்ன?

விடை— சாம்பவிவாக்கியமாவது, பிரமஞான வியாபகமே ஜெகத்தானதால் அந்த ஜெகத்தோற்றமே முத்தியென்பது, ஞானம் பரிணாமகிதமாதலால் அதுகூடாது.

வினா— சிக்ஷைவாக்கியமாவதென்ன?

விடை— சிக்ஷைவாக்கியமாவது, ஞானாசிரியனையும் பிரமமாகப்பாவித்து அவருக்கனுகூலவிருத்தியாய்நடந்து அவரைப்பூசிப்பதே முத்தியென்பது, பிரமத்தையறிந்து ஞானாசிரியனையும் பிரமமாகப்பாராமல் பரோட்சமாய்ப் பாவிக்கையால் அது கூடாது.

ஆ வாக்கியங்கள் ௱அ.

இவையல்லாமலும் இவைகட்குக் கீழ்ப்பட்டமுத்திகளைச்சொல்லும் வாக்கியங்களு மின்னமனேகமுண்டென்று சொல்லியருளி அதற்குமேல் மகாவாக்கியமுறைமையை உபதேசிக்கத்தொடங்கினார்.

# மகாவாக்கியவிவேகம்.

வினா— மகாவாக்கியமாவதென்ன?

விடை— ஓய் ஜனகாதிகளே மகாவாக்கியமாவது சதுர்விதபேதமும் அஷ்டவித சுலோகமுமாகவிருக்கும். அதெப்படியெனின், பிரஞ்ஞானம் பிரமம், அகம்பிரமாஸ்மி, தத்துவமசி, அயமாத்மாப்பிரமமென்று நான்குவேதமாம்.

வினா— அஷ்டவிதசுலோகமாவதென்ன?

விடை— அஷ்டவிதசுலோகமாவது, முதலாவது, திரியமாகிய ஜீவேஸ்வர ஜகத்தானது எந்தவறிவினால்பஞ்சேந்திரியங்களுக்கறியப்படுகின்றதோ அந்தவறிவே பிரஞ்ஞானமென்பது.

இரண்டாவது, பிரமாதி இந்திராதி தேவர்களிடத்தும் மனுஷாதி அசுராதி சதுஷ்ப்பாத மிருகப்பட்சிகளாகிய சகல ஜீவகோடிகளிடத்தும் நம்மிடத்தும் எஃது, ஏகமாய் அகண்டசொரூபமாய் கவளீகரித்திருக்கின்றதோ அஃதே பிரமமென்பது.

மூன்றாவது, பரிபூரணமா யெல்லாவற்றிற்குமேலாகிய வாத்மாவே தேகாதி சகல ஞானங்கட்கு மதிகாரியாயிருக்கிற புத்திக்குச் சாட்சியாய்ப் பிரகாசித்துநிற்கும் ஆதலா லஃதே அகமென்பது.

நான்காவது, அவ்வறிவே பரிபூரணமா யெல்லாவற்றிற்குமேலாய் பிரகாசிக்கின்ற பிரமமென்பது அஸ்மியென்னும் பதத்தினால் விசாரிக்கப் பிரமமே நாமென்றாயிற்று.

ஐந்தாவது, ஏகமாய் இரண்டற்றதாய் நாமரூபமற்றதாய் நிச்சலமாயுள்ளது எந்தச்சத்தோ அதுசிருஷ்டிக்கு முன்னும்பின்னும் இப்போதும் எப்போதும்

எவ்விடத்திலும் பிரகாசியாநிற்கின்றது அஃதே தத் என்பது.

ஆறுவது, கேட்கிறவனா யிருப்பவனுடைய தேகேந் திரியாதீதமாயிருக்கிறவஸ்து எஃதோ அஃதே தொம் என்பது அசியென்னும் பதத்தினால் விசாரிக்க அது நீயாயினையென்றாயிற்று.

ஏழாவது, சுயம்பிரகாசமாய் அபரோட்சமாயிருக் கிறதெஃதோ அஃதே அம்மென்பது அகங்காரமு தல் சரீரபரியந்தத்திற்கும் எப்போதும் பிரியமுள்ள தாயிருக்கிற வறிவு எஃதோ அஃதே ஆத்மாவென் பது.

எட்டாவது, பார்க்கப்படுகிற சகளமாயிருக்கிற ஜெ கத்திற்குச் சாட்சியாய் நித்தியமங்கள கல்யாணசொ ரூபமாய் பிரமசப்தத்தினால் வர்ணிக்கப்படுவதாயிருக் கின்ற பொருளெஃதோ அஃதே ஸ்வயம்பிரகாசமாய் விளங்குகிற பிரமமென்பது. இவையே அஷ்டவித சுலோகமாம் இவைநான்கையும் மகாவாக்கியமென்று பொதுப்படச் சொல்லப்படும். இவற்றுள் சாமவேத மகாவாக்கியத்தைமாத்திரம் ஒருமொழியென்றுசொல் லப்படும். இதுவுமல்லாமல் இவ்வாக்கியங்கள் அனந் தசமயங்களையும் அனந்தமுத்திகளையுஞ் சொல்லுமா கையால் இதுகளுங்கூடாது.

வினா— ஆனால்-சித்தாந்தமாவதென்ன?

விடை— சித்தாந்தமாவது, ஈஸ்வரானுக்கிரகத்தினா லும் மகான்கள் தரிசனத்தினாலும் சற்குருகடா க்ஷத்தினாலும் மோக்ஷசாதனம்பெற்று முற்கூறி யவாக்கியமுத்தி கிருதகிருத்திய அனுபவசாட் சாத்காரபலத்தையடையவேண்டியது. மேலும் இந்தவாக்கிய வுபதேசத்தைப்பெறும் அதிகாரிக ளும் ஐந்துபேதமாயிருப்பார்கள்.



## அதிகாரபேதம்.

வினா — அதிகாரபேதமாவதென்ன?

விடை — அதிகாரமாவது, சாங்குசித்தன்-காருண்யன்-சமரசன்-சம்பவன்-மந்தனென்று-ஐந்துபேதவதிகாரிகளாம், அவர்களுள் சாங்குசித்தனுக்கு, அஷ்டாங்க பஞ்சவுபக்கிரமவயிக்யசமாதியான ஆகமசித்தாந்தத்தையும்-காருண்யனுக்கு, காரணகாரியபஞ்சவுபக்கிரம வயிக்ய சமாதியான வேதாந்தசித்தாந்தத்தையும்-சமரசனுக்கு, வேதாகமசமரசசித்தாந்தமான இருபத்தைந்துபடி யொழுங்கு சமாதியையும்-சம்பவனுக்கு, சுத்தசைவசித்தாந்தமென்னுஞ் சிவஞானபோதக தக்ஷிணாமூர்த்த ஞானமுத்திரா மௌன சமாதியையும் - மந்தனுக்கு, இதிகாசபுராண சித்தாந்தமான விஷ்யலயசமாதியையும் அனுக்கிரகிக்கவேண்டும்.

வினா — இந்தவதிகாரபேதமறிவதெங்ஙனம்?

விடை — இந்தவதிகாரிகளின் பேதமறியும்வகை யெங்ஙனமெனின் சற்குரு சந்நிதானப்பட்டவன் இருதயத்திலுள்ளபடி ஞானேதயமாகிற விலக்கணமுடையவன் சாங்குசித்தன், சற்குருசந்நிதானப்பட்டு வாக்கியம்பெற்று அந்தக் குருவாக்கியமே சுருதியாகக்கொண்டு சுவானுபூதியடைந்து இங்ஙனங் குருவாக்கிய சுருதிவாக்கியமாகிய விருவகைச்சம்மதப்படி அகத்தில்விளங்கு மிலக்கணமுடையவன் காருண்யன், சகல வேதாகமசாஸ்திர சமயநிலைகளும் பட்சபாதமின்றிச் சமமாகக்காணு மிலக்கணமுடையவன் சமரசன், தான் நின்றநிலையே நிலை, தான்கொண்டசமயமே சமயம், அவைகட்கேற்பத் தான்படித்த சாஸ்திரமே சாஸ்திரம், மற்றெல்லாம் நிலையல்லவென்

று கண்டனம்பண்ணு மிலக்கணமுடையவன் சம்பவன், சகல சமயங்களையும் சாஸ்திரங்களை யும்பார்த்து ஒன்றிலும் நிலைகொள்ளாதவனுபவ விலக்கணமுடையவன் மந்தன், ஆகிய வைந்ததி காரிகளுக்கு மேற்சொல்லியபடி ஐந்துவிதமாய னுக்கிரகிக்கவேண்டியது.

## சாங்குசித்தனுக்கு உபதேசிக்குமுறை.

வின— ஆனால் இவ்வைந்ததிகாரிகளுக்கும் அவ்வைந் துவித சமாதிகளை யனுக்கிரகிக்கு முறைமை யெப்படி?

விடை— அஃதெப்படியெனில், சாங்குசித்தனுக்குவே தாகம சம்மதப்படி வாக்கியாதீத மென்றொரு வாக்கியமுண்டு அது தொந்தத்சியதிநிசமென்ப து, அஃது - தொம், தத், அசி, அதி, நிஜ, என்று ஐந்துபதமாயிருக்கும், அவற்றுள் தொம்பதத் தில் தூலசரீரம், சூட்சுமசரீரம், காரணசரீரம், சீவன், கூடஸ்தர். ஆ (ரு) தத்பதத்தில்-விராட் டு, இரணியகருப்பம், மாயை, ஈஸ்வரன், பிர மம். ஆ (ரு) அசிபதத்தில் - சத்து, சித்து, ஆ னந்தம், பரப்பிரமம், சர்வசாட்சி. ஆ (ரு) அதி பதத்தில் - சுத்தம், சூன்யம், சுபாவம், ஒழிவு, அதீதம். ஆ (ரு) நிசபதத்தில் - யதார்த்தம், ரகசியம், அறுதி, ஒடுக்கம், மோனம், ஆ (ரு) இவற்றுள் தூலசரீரம் (ரு) சூட்சுமசரீரம் (ரு) காரணசரீரம் (ரு) அபிமானி (ரு) சாட்சி (ரு) ஆ (உரு) இதுவே சாங்குசித்தனுக் கருக்மான அங்காங்க பஞ்சவுபக்கிரம அயிக்ய சமாதியாம்.

வினு— ஆனுலஃதுபதேசிக்கு முறைமையில் முற்கூறிய இருபத்தஞ்சுக்கும் அங்காங்க பஞ்சவுபக்கிரமமெப்படி?

விடை— அஃதெப்படியெனின், பிராயச்சித்தவானுக்குச் சுத்தனென்று நாமமுண்டானதுபோல யதார்த்தத்திற் சுத்தமும், சுத்தனுக்கு அழிவற்றவனென்று நாமமுண்டானதுபோலச் சத்தில் விராட்டும், மண்ணிற் கடமுண்டானதுபோலவிராட்டில் தூலசரீரமுமுண்டாம்.

சொல்லில்லாதவிடத்தில் பொருளில்லாததுபோல் இரகசியத்திற் சூன்யமும், கேவலத்தி லறிவுசெனித்ததுபோற் சூன்யத்திற் சித்தும், அறிவில் கரணஞ்செனித்ததுபோற் சித்திலிரணியகருப்பமும், சூக்குமையிற் வைசந்திசெனித்ததுபோ லிரணியகருப்பத்திற் சூட்சும சரீரமுமுண்டாம்.

அறுதிச்சொல் லுடையவனுக்குச் சுபாவியென்று நாமமுண்டானதுபோ லறுதியிற்சுபாவமும், நிர்மல சித்தத்திற் சுகமுண்டாவதுபோற் சுபாவத்திலானந்தமும், சுகசித்தத்திற் சுதந்தரயுத்தி ஜெனித்ததுபோ லானந்தத்தில் மாயையும், தோப்பினிடத்துத் தனிமரங்கண்டதுபோல மாயையில் அவித்தையுமுண்டாம்.

அசைவின்றிய விடத்திற் றொழிலில்லாததுபோல ஒடுக்கத்திலொழிவும், ஒழிவுவந்தவனுக்குச் சுழுத்தியன்போற் பரவசனென்னு நாமமுண்டானதுபோல ஒழிவிற் பரப்பிரமமும், ஆகாசம் நிர்மலக்கண்ணடியிற் பிரதிபலித்ததுபோற் பரப்பிரமத்தி லீசுரனும், சுதந்தரனுக்குப் பரத்சத்தி நீங்கினவுடன் சுதந்தரவானென்னு நாமமுண்டானதுபோல ஈசுரனிடத்திற் சீவனுமுண்டாம்.

இரகசியத்தி லதீதமென்னும் வாக்கியமுண்டான துபோல மோனத்திலதீதமும், பர்வதவுச்சிவாசிக்குப் பர்வத தரிசனமென்னு நாமமுண்டானதுபோ லதீதத் திற் சர்வசாட்சியும், மகாகாசத்தில் மடாகாசமுண் டானதுபோற் சர்வசாட்சியிற் பிரமமும், மடாகாசத் திற் கடாகாச முண்டானதுபோற் பிரமத்திற் கூடஸ் தருமுண்டாம். இதுவே அங்காங்க பஞ்ச வுபக்கிர மம்.

வினா = அயிக்யமெப்படி?

விடை = அயிக்ய மெப்படியெனின், தூலசரீரத்தை விராட்டிலும், விராட்டைச் சத்திலும், சத்தைச் சுத்தத்திலும், சுத்தத்தை யதார்த்தத்திலும், சூட்சுமசரீரத்தை இரணியகருப்பத்திலும், இர ணியகருப்பத்தைச் சித்திலும், சித்தைச்சூன்யத் திலும், சூன்யத்தை இரகசியத்திலும், காரண சரீரத்தை மாயையிலும், மாயையை ஆனந்தத்தி லும், ஆனந்தத்தைச் சுபாவத்திலும், சுபாவத் தை அறுதியிலும், சீவனை ஈஸ்வரனிலும், ஈஸ் வரனைப் பரப்பிரமத்திலும், பரப்பிரமத்தை ஒ ழிவிலும், ஒழிவை ஒடுக்கத்திலும், கூடஸ்த னைப் பிரமத்திலும், பிரமத்தைச் சர்வசாட்சியி லும், சர்வசாட்சியை அதீதத்திலும், அதீதத்தை மோனத்திலுமொடுக்கி - ஒடுங்காமற் சேடித்தி ருந்தது நிசபத்மைந்து, இவ்வைந்தில் யதார்த் தம் ஸ்தூல சரீரமாகவும், இரகசியம் சூட்சும சரீரமாகவும், அறுதிகாரண சரீரமாகவும், ஒடுக் கம் அபிமானியாகவும், மோனம் சீவசாட்சியாக வுமிருந்து - வேண்டியபடி சஞ்சரிப்பன்.

——∞∞——

## காருண்யனுக்குஉபதேசிக்குமுறை.

வினா= காருண்யனுக்கனுக்கிரகிக்கு முறைமையெப்படி?

விடை= காருண்யனுக்கருகமான காரணகாரியபஞ்சவுபக்கிரமமெப்படியெனின், சூரியபிம்பம் மலினமான கண்ணாடியிற் பிரதிபிம்பித்ததுபோற் சிவசாட்சியிற் சிவனும், விஷந்தீண்டினவனுக்கு மூர்ச்சையுண்டானதுபோற் சிவனிலவித்தையும் மூர்ச்சைதெளிவில் நினைவுண்டானதுபோலவித்தையிற் சூட்சுமசரீரமும், நினைவில் சொப்பனசரீர முண்டானதுபோற் சூட்சுமசரீரத்திற்றூல சரீரமுமுண்டாம்.

சூரியபிம்பம்நிர்மலமானகண்ணாடியிற்பிரதிபிம்பித்ததுபோற் பிரமத்திலீஸ்வரனும், ஆத்மாவுக்கு ஆத்மஞானமுண்டானபோலீசனில் மாயையும், ஞானவானுக் கிச்சையுண்டானதுபோல மாயையி லிரணியகருப்பமும், இச்சையுடையவனிடத்திற்கிருத்தியமுண்டானதுபோல் இரணியகருப்பத்தில் விராட்டுமுண்டாம்.

காட்டத்திலக்கினிபிரவேசித்தபோது காட்டமென்பதுபோய் அக்கினியென்று பேர்வந்ததுபோற் சத்தியாபகமாகிய சர்வசாட்சியிற்பரப்பிரமமும், அறிவிற் சாந்தகுண முண்டானதுபோற் பரப்பிரமத்திலானந்தமும், சாந்தியி லிராசதமுண்டானதுபோ லானந்தத்திற்சித்தும், இராசதத்தில் தாமசமுண்டானதுபோற் சித்திற் சத்துமுண்டாம்.

அதீதாவஸ்தை வந்தவனுக்குக் காரணகிருத்தியவொழிவுண்டானதுபோ லதீதத்திலொழிவும், காரண

வொழிவில் உள்ளஞ்சுபாவமாயிருக்கிறதுபோ லொழிவிற் சுபாவமும், சுபாவ நிச்சிந்தையுடையவனுக்கொரு தோற்றாவு மில்லாததுபோற் சுபாவத்திற் சூன்யமும், சூன்யகாணமே சுத்தமானதுபோற் சூன்யத்திற் சுத்தமுமுண்டாம்.

பேச்சற்றதே முடிவென்று பெயர்பெற்றதுபோல மோனத்தி லொடுக்கமும், முடிவே அர்த்தமென்பதுபோ லொடுக்கத்திலறுதியும், அதீதமே சொல்லற்ற பொருளானதுபோ லறுதியிலிரகசியமும், அதிரகசியமே யதார்த்தமென்று பெயர்பெற்றதுபோல இரகசியத்தில் யதார்த்தமுமுண்டாம். இதுவே காரணகாரியபஞ்சவுப்கிரமம்.

வினா= ஆனல் அயிக்கியமெப்படி?

விடை= அயிக்யமெப்படியெனின், தூலத்தைச் சூட்சுமத்திலும், சூட்சுமத்தைக் காரணத்திலும், காரணத்தைச் சீவனிலுஞ், சீவனைக் கூடஸ்தரிலும், விராட்டை இரணியகருப்பத்திலும், இரணியகருப்பத்தை மாயையிலும், மாயையை ஈசுரனிலும், ஈசுரனைப் பிரமத்திலும், சத்தைச்சித்திலும், சித்தை ஆனந்தத்திலும், ஆனந்தத்தைப் பரப்பிரமத்திலும், பரப்பிரமத்தைச் சர்வசாட்சியிலும், சுகத்தைச்சூன்யத்திலும், சூன்யத்தைச் சுபாவத்திலும், சுபாவத்தை ஒழிவிலும், ஒழிவை அதீதத்திலும், யதார்த்தத்தை இரகசியத்திலும், இரகசியத்தை அறுதியிலும், அறுதியை ஒடுக்கத்திலும், ஒடுக்கத்தை மோனத்திலும், ஒடுக்கி - ஒடுங்காமற் சேடித்திருந்த பஞ்சசாட்சியுந் தானும் தொம்பதலட்சியமான சீவசாட்சிதானுமிருந்து வாச்சியமான சரீரத்திரயவபிமானி

யையும், தற்பதலட்சியமான பிரமந் தானயிருந்து வாச்சியமான சரீரத்திரயவபிமானியையும், அசிபத லட்சியமான சர்வசாட்சி தானயிருந்து வாச்சியமான சரீரத்திரய வபிமானியையும், அதிபதலட்சியமான வதீதந் தானயிருந்து வாச்சியமான சரீரத்திரயவபிமானியையும், நிசபதலட்சியமானமோனந் தானயிருந்துவாச்சியமானசரீரத்திரய வபிமானியையும், பார்த்துகொண்டு வேண்டியபடி சஞ்சரிப்பன்.

---

## சமரசனுக்கு உபதேசிக்குமுறை.

---

வினா— சமரசனுக்கனுக்கிரகிக்குமுறைமையெப்படி?

விடை— சமரசனுக்கருகமான வேதாகம சமரசசித்தாந்த மனுக்கிரகிக்கு முறைமை யெப்படியெனின், படியொழுங்கு சமாதி இருபத்தைந்துமறிவித்துச் சித்தநிரோத முண்டாகும்பொருட்டுச் சமாதிகளின் தரிசனமும் - நாமமும் - மறைப்பும் நிவிர்த்தியும் - குற்றமும் - பகிர்முகத்திரிபுடியும் அந்தர்முகத் திரிபுடியும் - அவற்றையறியுஞ்சத்தியும் - சாதனசம்பிரதாய பேதமும் - சத்திபேதமும் - சைதன்யபேதமும் - இடையிற் சரீரம் விழுந்தாற்பலமும் - சமாதிசித்த பேதமுமாகிய பதின்மூன்றுவகையு மறிவிக்கவேண்டும்.

வினா— இவற்றுள் சமாதிதரிசனமும் நாமமுமெது?

விடை— சமாதிதரிசனமும் நாமமு மெதுவெனின், இந்திரியவிஷயமற்றுத் தேகஞானமாத்திரமாயிருப்பதே சிவஸ்தூலசரீரதரிசனம், இதற்குப்பூரகாரியசமாதியென்று பெயர்.

தேகஞானமின்றிய மனோசஞ்சலமே சீவசூட்சுமசரீரதரிசனம், இதற்கு விஷயலயசமாதியென்று பெயர்.

மனோலயமான அந்தகாரமே சீவகாரண சரீரதரிசனம், இதற்குச் சித்தநிரோதசமாதியென்று பெயர்.

அஞ்ஞானசுக சொரூபவறிவே சீவதரிசனம், இதற்குப் போதசமாதியென்று பெயர்.

அந்தகாரத்தையறியுமறிவே கூடஸ்ததரிசனம், இதற்குச் சித்தானுவித்தசமாதியென்று பெயர்.

இந்தச்சாட்சி ஞானத்தால் விசுவத்தையறிந்து அஃதுதானென்றே ஈஸ்வரஸ்தூலசரீரதரிசனம், இதற்கு விஸ்வரூபசமாதியென்று பெயர்.

விசுவவியாபகமே ஈஸ்வரசூட்சுமசரீரதரிசனம், இதற்கு விஸ்வவியாபகசமாதியென்று பெயர்.

விசுவலயமாய் சுத்தபடிகம்போல் நிர்மலமாயிருப்பதே ஈஸ்வரகாரணதரிசனம், இதற்கு விசுவலயசமாதியென்று பெயர்.

நிர்மலசுகசொரூபமேதன்பந்தானென்றே பிரமதரிசனம், இதற்குச் சிவஞானசமாதியென்றுபெயர்.

நிர்மலத்தையறிந்தவறிவு வியாபகந்தானென்றே பிரமதரிசனம், இதற்குச் சத்தானுவித்த சமாதியென்று பெயர்.

அந்தவறிவு சதரூபஞானந் தானெனவே சித்ரூபதரிசனம், இதற்குத் தத்துவலய சமாதியென்று பெயர்.

அந்தச்சத்து சித்ரூபந்தானென்றே சித்ரூபதரிசனம், இதற்குச் சவிகற்பசமாதியென்று பெயர்.

அந்தச்சித்து அதீதசுகசொரூபந் தானென்றே ஆனந்தரூபதரிசனம் இதற்கு ஆனந்தவேத்திய சமாதியென்றுபெயர்.

சுகாதீதபரவசந் தானதே பரப்பிரம்தரிசனம், இதற்கு நிருவிகற்பசமாதியென்று பெயர்.

பரவசத்தை யறிந்தவறிவு தானதே சர்வசாட்சிதரிசனம் இதற்குச் சஞ்சாரசமாதியென்று பெயர்.

அதிரற்றுத் தன்மயஞானந் தானதே சுத்ததரிசனம் இதற்கு ஆரூடசமாதியென்று பெயர்.

அந்த ஞானமற்றிருப்பதே சூனியதரிசனம், இதற்குச் சர்வசூனியசமாதியென்று பெயர்.

அதில் நிச்சயம்பிறந்து அந்த நிச்சயந்தானதே சுபாவதரிசனம், இதற்கு விகற்பலயசமாதியென்றுபெயர்.

அவ்வனுபவத்தில் விஷயவாசனைவரும் வரின் அவ்வாசனையற்று ஒருவாசனையும் வராமலிருப்பதே ஒழிவுதரிசனம், இதற்கு ஒழிவுசமாதியென்றுபெயர்.

சர்வவாசனையுந் தன்மயமானதே அதீததரிசனம், இதற்கு உன்னதசமாதியென்று பெயர்.

அதிற்-சந்தேகவிபரீதமின்றி யதார்த்தஞானஞ்சொலித்ததே யதார்த்ததரிசனம், இதற்கு யதார்த்தசமாதியென்று பெயர்.

அந்த ஞானநிசயமே இரகசியதரிசனம், இதற்கு இரகசியசமாதியென்று பெயர்.

அதற்குமேல் வேதாகமஞ்சொல்வதற் கிடமில்லையென்றறிந்து சாஸ்திரவாசனையைச் சுத்தமாய்விட்டதே அறுதிதரிசனம், இதற்கு அறுதிசமாதியென்று பெயர்.

அந்த ஞானரூடமே ஒடுக்கதரிசனம், இதற்கு ஒடுக்கசமாதியென்று பெயர்.

அந்தப் பிரமப்பிரகாச தேஜோ ஞானலயமே மோனதரிசனம், இதற்கு மோனசமாதியென்று பெயர், இதுவே முடிந்தநிலை.

வினா— இந்தச்சமாதிகளுக்கு மறைப்பும் நிவிர்த்தியுமெது?

விடை— அவை யெதுவெனின், சீவதூல சரீரத்தைமறைத்தது தமோவவித்தை, நிவிர்த்தி தமோவித்தை.

சீவசூட்சுமசரீரத்தை மறைத்தது ரஜோவவித்தை, நிவிர்த்தி ரஜோவித்தை.

சீவகாரணசரீரத்தை மறைத்தது சத்துவவவித்தை, நிவிர்த்தி சத்துவவித்தை.

சீவனை மறைத்தது அவ்வியத்தவித்தை, நிவிர்த்தி அவ்வியத்தவவித்தை.

கூடஸ்தனை மறைத்தது சுத்தவித்தை, நிவிர்த்தி சுத்தவித்தை.

ஈஸ்வரஸ்தூலசரீரத்தை மறைத்தது தமோவித்தை நிவிர்த்தி தமோஞானம்.

ஈஸ்வர சூட்சுமசரீரத்தை மறைத்தது ரஜோவித்தை, நிவிர்த்தி ரஜோஞானம்.

ஈஸ்வர காரணசரீரத்தை மறைத்தது சத்துவவித்தை, நிவிர்த்தி சத்துவஞானம்.

ஈஸ்வரனை மறைத்தது அவ்வியத்தவித்தை, நிவிர்த்தி அவ்வியுத்தஞானம்.

பிரமத்தை மறைத்தது சுத்தவித்தை, நிவிர்த்தி சுத்தஞானம்.

சத்தை மறைத்தது தமோஞானம், நிவிர்த்திதமோ ஆனந்தம்.

சித்தை மறைத்தது ரஜோஞானம், நிவிர்த்திரஜோ ஆனந்தம்.

ஆனந்தத்தை மறைத்தது சத்வஞானம், நிவிர்த்தி சத்வ ஆனந்தம்.

பரப்பிரமத்தை மறைத்தது அவ்வியத்தஞானம், நிவிர்த்தி அவ்வியத்த ஆனந்தம்.

சர்வசாட்சியை மறைத்தது சுத்தஞானம், நிவிர்த்தி சுத்த ஆனந்தம்.

சுத்தத்தை மறைத்தது தமோவானந்தம், நிவிர்த்தி தமோவதீதம்.

சூன்யத்தை மறைத்தது ரஜோவானந்தம், நிவிர்த்தி ரஜோவதீதம்.

சுயாவத்தை மறைத்தது சத்வவானந்தம், நிவிர்த்தி சத்வவதீதம்.

ஒழிவை மறைத்தது அவ்வியத்தவானந்தம், நிவிர்த்தி அவ்வியத்தவதீதம்.

அதீதத்தை மறைத்தது சுத்தவானந்தம், நிவிர்த்தி சுத்தவதீதம்.

யதார்த்தத்தை மறைத்தது தமோவதீதம், நிவிர்த்தி தமோமோனம்.

இரகசியத்தை மறைத்தது ரஜோவதீதம், நிவிர்த்தி ரஜோமோனம்.

அறுதியை மறைத்தது சத்வவதீதம், நிவிர்த்தி சத்வமோனம்.

ஒடுக்கத்தைமறைத்தது அவ்வியத்தவதீதம், நிவிர்த்தி அவ்வியத்தமோனம்.

மோனத்தை மறைத்தது சுத்தவதீதம், நிவிர்த்தி சுத்தமோனம் இதுவேமுடிந்தநிலை.

வினா— இந்தச்சமாதிகளுக்குக் குற்றமெது?
விடை— குற்றமெதுவெனின், சீவஸ் தூல்சரீரத்திற் குச்சிற்பொறியும், சீவசூட்சுமசரீரத்திற்கு மவுட்டியமும், சீவகாரணசரீரத்திற்கு நித்திரையும், சீவனுக்கு அந்தகாரமும், கூடஸ்தனுக்குத் தற்போதமும், ஈசுரஸ்தூலசரீரத்திற்கு விடயமும், ஈசுரசூட்சுமசரீரத்திற்கு விருத்திலயமும், ஈசுரகாரணசரீரத்திற்குநாதமும், ஈசுரனுக்ககண்டவிருத்தியும், பிரமத்திற்குப் படிகப்பிரகாசமும், சத்துக் கானந்தமும், சித்துக்குப்போதலயமும், ஆனந்தத்திற் கானந்தாதீதமும், பரப்பிரமத்திற்குச் சித்தும், சர்வசாட்சிக்கு மகாப்பிரகாசமும், சுத்தத்திற்கு அகண்டஞானமும், சூன்யத்திற்கு வத்துவில் சத்தியபுத்திசெய்விப்பதும், சுபாவத்திற்கு அனிச்சயமும், ஒழிவுக்கு அவாயும், அதீதத்திற்குத் துவிதவாசனையும், யதார்த்தத்திற்கு அசம்பாவனையும், இரகசியத்திற்கு சிரத்தையின்மையும், அறிதிக்கு விருத்திவாசனையும், ஒடுக்கத்திற்குச் சாதனமும், மோனத்திற்கு அனுபவமுங்குற்றமாம், இவ்விருபத்தைந்துசமாதிகளுக்கும் இவ்விருபத்தைந்து குற்றங்களுங் கூடாது.

வினா— ஆறுவிச்சமாதிகளில் சாட்சிசைதன்னிய மைந்திற்கும் பகிர்முகம் அந்தர்முகமென்னும் இருவகைத்திரிபுடிகளாவதேது?

விடை— அஃதேதெனின், கூடஸ்தருக்குப் பகிர்முகத்திரிபுடியாவது-ஞாதுரு சீவன், ஞானம், அந்தக்கரணவிருத்தி, ஞேயம் விஷயம், ஆ (ங) அந்தர்முகத் திரிபுடியாவது - ஞாதுரு நிராகாரம், ஞானம் நிர்விஷயம், ஞேயம் நிர்ம்மலம், ஆ (ங.)

பிரமத்திற்குப் பகிர்முகத்திரிபுடியாவது - ஞாதுரு இச்சாசத்தி, ஞானம் ஞாஞசத்தி, ஞேயம் கிரியாசத்தி, ஆ (க) அந்தர்முகத் திரிபுடியாவது-ஞாதுரு சத்து, ஞானம் சித்து, ஞேயம் ஆனந்தம் ஆ (க)

சர்வசாட்சிக்குப் பகிர்முகத்திரிபுடியாவது-ஞாதுரு சத்து, ஞானம் சித்து, ஞேயம் ஆனந்தம், ஆ (க) அந்தர்முகத் திரிபுடியாவது - ஞாதுரு சுத்தம், ஞானம் சூனியம், ஞேயம் சுபாவம், ஆ (க)

அதீதத்துற்குப் பகிர்முகத்திரிபுடியாவது-ஞாதுரு சுத்தம், ஞானம் சூன்யம், ஞேயம் சுபாவம் ஆ (க) அந்தர்முகத்திரிபுடியாவது-ஞாதுரு யதார்த்தம், ஞானம் இரகசியம், ஞேயம் அறுதி, ஆ (க)

மோனத்திற்குப் பகிர்முகத்திரிபுடியாவது - ஞாதுரு யதார்த்தம், ஞானம் இரகசியம், ஞேயம் அறுதி ஆ (க) அந்தர்முகத்திரிபுடியாவது ஞாதுரு நிஷ்டையின்மை, ஞானம் பொருளின்மை, ஞேயம் நிலையின்மை, ஆ (க)

வினா— இந்தச்சாட்சி சைதன்னியமைந்து மெத்தச்சத்தியைக்கொண்டு இவ்விருவகைத் திரிபுடிகளையு மறிந்தது?

விடை— அஃதெவ்வா றறிந்ததெனின், கூடஸ்தர்சுத்தவவஸ்தையாய் பகிர்முகத்திரிபுடியையும் சுத்தஞானத்தா லந்தர்முகத்திரிபுடியையும், பிரமம் பிரகிருதியாற் பகிர்முகத்திரிபுடியையும், விகிரியா லந்தர்முகத்திரிபுடியையும், சர்வசாட்சிற் களையாற் பகிர்முகத்திரிபுடியையும், சின்மயத்தா லந்தர்முகத்திரிபுடியையும், அதீதம் உன்முகசத்தியாற் பகிர்முகத்திரிபுடியையும், அவுன்முகசத்தியா லந்தர்முகத் திரிபுடியையும், மோனம்

அதிவிலட்சணையால் பகிர்முகத்திரிபுடியையும், லயசத்தியா லந்தர்முகத் திரிபுடியையு மறிந்த தென்றறிக.

வி= சமாதிசாதனசம்பிரதாயபேதமெப்படி?

விடை= அஃதெப்படியெனின், சமாதிலட்சணம், சாதனம், சாதிக்கின்றபெயர். விரோதம், அவதி, குரு, அடைந்தபெயர். ரிஷி, கிரியை, பேதம், சுருதி, யுத்தி, அனுபவம், பிரபஞ்ச கிருத்தியத் திற்காரணவிருத்தி, விஷயவாசனை, கன்மானுஷ்டானபூசை, ஆசனம், பிரபஞ்சசத்தம், உபதேசவேளை, தலம், சங்கம், சமாதிசெய்யும்வேளை, பலம், நிர்ணயம், என்று, இருபத்துநான்குபேதமாம்.

வி= சமாதிலட்சணமெது?

விடை= சமாதிலட்சண மெதுவெனின், வஸ்துதானாயிருப்பது.

வி= சாதனமெது?

விடை= சாதனமெதுவெனின், சித்தநிரோதனம்.

வி= சாதிக்கிறபேரார்?

விடை= சாதிக்கிறபேராரெனில், சுத்தஞானிகள்.

வி= விரோதமெது?

விடை= விரோதமெதுவெனின், பூதப்பிரதியந்தவாசனைகள்.

வி= அவதியெது?

விடை= அவதியெதுவெனின், நினையாதிருக்கையில் விடயவாசனை வருகிறதுபோற் சமாதிவாசனையுஞ் சாதியாமல்வருகின்றதாம்.

வி= குருவார்?

விடை= குருவாரெனின், ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி.

வினா= அடைந்தபோரார்?

விடை= அடைந்தபோரானின், நந்திகேஸ்வரர்.

வினா= ரிஷியார்?

விடை= ரிஷியாரெனின், பராசரர், வியாசர்.

வினா= கிரியையெது?

விடை= கிரியையெதுவெனின், விடுபட்டதில்நிவிர்த்தியும் நிலையில் பிரவிர்த்தியுமாம்.

வினா= பேதமெது?

விடை= பேதமெதுவெனின், முற்கூறிய இருபத்தைந்துபடியொழுங்கும் பேதமாம்.

வினா= சுருதியெது?

விடை= சுருதியெதுவெனின், கைவல்ய முதலான வேதாகமங்கள்.

வினா= யுத்தியெது?

விடை= யுத்தியெதுவெனின், இருளில் மயிற்குஞ்சானது தாக்ககர்மத்தினற் போனவனுக்குப் பஞ்சவன்ன வண்டாதல்போற் சொரூபத்திலழுந்திப் போமலிருப்பதாம்.

வினா= அனுபவமெது?

விடை= அனுபவ மெதுவெனின், மகாராஜாவைப் போற் கெம்பீரமாயிருத்தல்.

வினா= பிரபஞ்சகிருத்தியத்தில் கரணவிருத்தி யெப்படியிருக்கும்?

விடை= அஃதெப்படியிருக்குமெனின், கூத்தாடி பாசாங்கடிப்பதுபோல் விவகாரந் தடையறச்செய்தல்.

வினா= விஷயவாசனையெப்படி?

விடை= விஷயவாசனை யெப்படியெனின், சார்வபூமனை ராஜபோகம்போற் பொசித்தல்.

வினா= கன்மானுஷ்டானபூசையெப்படி?
விடை= அஃதெப்படியெனின், சமாதி நீங்கினபோது மவ்வனுபவமாய் விதிநிஷேதமின்றிநடப்பது.
வினா= ஆசனமெது?
விடை= ஆசனமெதுவென்னின், வியாக்கிரம சர்மமுதலியவைகளாம்.
வினா= பிரபஞ்சசத்தமெப்படியிருக்கும்?
விடை= அஃதெப்படியிருக்குமெனின், அதிகநித்திரை செய்யுஞ் சிசுவைத்தாயானவளெழுப்பி உறக்கத்திலன்னமூட்டும்போது அதற்குக்கேட்குஞ் சத்தம்போலிருக்கும்.
வினா= உபதேசவேளையெது?
விடை= உபதேசவேளை யெதுவெனின், அர்த்தஜாமம்.
வினா= தலமெது?
விடை= தலமெதுவெனின், வனம்-மலை-குகை-முதலியதுகளாம்.
வினா= சங்கமார்?
விடை= சங்கமாரெனின், உபாதியுடையபேர்.
வினா— சமாதிசெய்யும் வேளையெது?
விடை= சதாகாலமுமாம்.
வினா= பலமெது?
விடை= பலமெதுவெனின், சரீரமிருக்கும்போதே சொரூபசாட்சாத்காரந் தானாவது.
வினா= நிண்ணயமெப்படி?
விடை= நிண்ணயமெப்படியெனின், அசம்பாவனையற்றிருப்பது, இஃதே - சாதனசம்பிரதாயபேதமென்று சொல்லப்படும்.

வின= சத்திபேதமும் சைதன்னியபேதமுமெப்படி?

விடை= அஃதெப்படியென்னின், மோனநிதந்தானயிருந்த சைதன்யம் மோனசத்தியுடன்கூடி மோனமென்றும், ஞானசத்தியுடன்கூடி ஒடுக்கமென்றும், நிச்சயசத்தியுடன்கூடி அறுதியென்றும், அதிசய சத்தியுடன்கூடி இரகசியமென்றும், யதார்த்தசத்தியுடன்கூடி யதார்த்தமென்றும், அதீதசத்தியுடன்கூடி அதீதமென்றும், அசஞ்சலசத்தியுடன்கூடி ஒழிவென்றும், அநிச்சய சத்தியுடன்கூடிச் சுபாவமென்றும், அசிந்தித சத்தியுடன்கூடிச் சூன்யமென்றும், லயசத்தியுடன்கூடிச் சுத்தமென்றும், சிற்சத்தியுடன்கூடிச் சர்வசாட்சியென்றும், பராசத்தியுடன்கூடிப் பரப்பிரமானந்தனென்றும், சித்ரூபசத்தியுடன்கூடித் தேஜோமயனென்றும், சத்ரூபசத்தியுடன்கூடிப் பிரமமென்றும், சுத்தமாயாசத்தியுடன்கூடி ஈச்சுரனென்றும், தமோமாயாசத்தியுடன்கூடி அந்தரியாமியென்றும், இரணியகர்ப்ப சத்தியுடன்கூடிச் சூத்திராத்மாவென்றும், விராட்டுருவசத்தியுடன்கூடி வைஸ்வானரனென்றும், சுத்தவித்தையா சத்தியுடன்கூடிக் கூடஸ்தனென்றும், ரஜோவித்தையா சத்தியுடன்கூடிச் சீவனென்றும், தமோவித்தையா சத்தியுடன்கூடிப் பிராஞ்ஞனென்றும், விகிர்தசத்தியுடன்கூடித் தைசதனென்றும், தமோசத்தியுடன்கூடி விசுவனென்றும், ஒருகற்பனையுமற்றவஸ்துவுக் கற்பனாமம் வந்ததென்றறிக.

வின= இங்ஙனஞ் சமாதிசாதனை செய்யுங்காலத்திலிடையிற் சரீரம்விழுந்தாற் பலமெது?

விடை= தூலசரீரதரிசனத்திற் சரீரம்விழுந்தால் தூலப்பிருதிவி லோகமும், சூட்சும சரீரதரிசனத்தில் தூல அப்புலோகமும், காரணசரீரதரிச

னத்தில் தூல வக்கினிலோகமும், சிவதரிசனத்தில் தூலவாய்வுலோகமும், கூடஸ்த தரிசனத்தில் தூலவாகாசலோகமும், விராட்டு தரிசனத்தில் சூட்சுமப்பிருதிவிலோகமும், இரணியகாப்பதரிசனத்தில் சூட்சும அப்புலோகமும், மாயாதரிசனத்தில் சூட்சுமவக்கினிலோகமும், ஈஸ்வரதரிசனத்தில் சூட்சுமவாய்வுலோகமும், பிரமதரிசனத்தில் சூட்சும வாகாசலோகமும், சத்துதரிசனத்தில் காரணப்பிருதிவிலோகமும், சித்துதரிசனத்தில் காரணவப்புலோகமும், ஆனந்த தரிசனத்தில் காரணவக்கினிலோகமும், பரப்பிரமதரிசனத்தில் காரணவாய்வுலோகமும், சர்வசாட்சி தரிசனத்திற் காரணவாகாசலோகமும், சுத்ததரிசனத்தில் காரணாதீதப்பிருதிவிலோகமும், சூன்யதரிசனத்தில் காரணாதீதவப்புலோகமும், சுபாவதரிசனத்தில் காரணாதீதவக்கினிலோகமும், ஒழிவுதரிசனத்தில் காரணாதீத வாய்வுலோகமும், அதீததரிசனத்தில் காரணாதீதவாகாசலோகமும், யதார்த்ததரிசனத்திற்சுத்தப்பிருதிவிலோகமும் இரகசியதரிசனத்தில் சுத்தவப்புலோகமும், அறிதரிசனத்தில் சுத்தவக்கினிலோகமும், ஓடுக்கதரிசனத்தில் சுத்தவாய்வுலோகமும், மோனதரிசனத்தில் சுத்தவாகாசலோகமும், பிராப்தியாம் ஒருபாதியுமின்றித்தானாய்விளங்குமிடத்திற் சர்வலோகாதீதமாய்த் தன்மயமாய்ப்பிரகாசிக்கும் இஃதே தீர்ந்தநிலையென்றறிக.

வினா — இவற்றுள் சமாதிபேதமெப்படி?

விடை — சமாதிபேதமெப்படியெனின், தூலபூதலோகப்பிராப்திக்குச் சுத்தமாயாதனுவும், சூட்சுமபூதலோகப்பிராப்திக்கு ஞானதனுவும், காரணபூதலோக பிராப்திக்குச் சிற்சத்திதனுவும், சுத்தபூலோகப்பிராப்திக்கு இலட்சணசூன்யதனுவும் அந்தந்தத்தனுவுக்கைந்துபூதமும்,ஒன்றுக்கொன்

று உன்னதமும், போகதாரதன்மியமு, மதிசயமு முண்டு. அவற்றுள் பதினறுசமாதி சாதனபலத் தினற்சித்திக்கும் ஒன்பதுசமாதி தேவதானுக்கிரகத்தினலும், சத்கர்மசாதனையினலுஞ்சித்திக்க வேண்டும்.

வின = அஃதெப்படிசித்திக்கும்?

விடை = எப்படி சித்திக்குமெனின், தெய்வவுபாசனையாற் சித்தநிரோதனமும், சற்குருவுக்கனுகூலவிருத்தியாய்நடந்து அவரது பரிபூரணகடாட்சம் பெற்றால் அஞ்ஞானந்தாகார நிவிர்த்தியும், சிவபத்தி மேலீட்டினல் விசுவலயமும், சாட்சாத்காரம்பெற்ற மகான்களுக் கனுகூலவிருத்தியாய் நடந்து அவர்களைச் சந்தோஷப்படுத்தினல் ஆனந்தஜெனிதமும், சர்வஜீவதயையின லானந்தபரவசமும், சர்வ வுபரதியினல் சூன்யதரிசனமும், ஒழிவு வயிராக்கியத்தினல் வாசனக்ஷயமும், சிரவணதித்திரய பலத்தினல் அதிசயஞ்செனித்த இரகசியமுமவரும், மோனம் ஜென்மாந்திர கிருதகிருத்தியப்பிராப்தியானசாங்குசித்தனுக்கே வருமென்றறிக.

## சம்பவனுக்கு உபதேசிக்குமுறை.

வின = சம்பவனுக்குஉபதேசிக்குமுறைமையெப்படி.

விடை = சம்பவனுக்கருகமான் சுத்தசைவ சித்தாந்தமாகிய மோனசமாதி முறைமை யெப்படியெனின், ஓய் ஜனகாதிகளே, கேளுங்கள் இந்தச்சமாதிக்கு மாயை, கன்மம், ஆணவவிருள், விபரீதபாவனை, அசம்பாவனை, சித்தசஞ்சலம், என்று ஆறுமறைப்புண்டு. அவ்வாறுவகைக்கும் விரோதம் ஆறுவகையுண்டு, இவ்வாறும் அங்கமாய்க் கொண்டுமௌனமாயிருக்கிறோம். நீங்களும் அவ்வாறுவிதமறைப்புமின்றிச்சமாதியிருப்பீர்களாக

வினா= அவையெப்படி?

விடை= அவையெப்படியெனில்;-நாம் மகாமாயையாகிற முயலகனை மேலிடவொட்டாமல் மிதித்திருக்கிறோம், நீங்களும் மகாமாயை மேலிடாதபடி தேகாதிப்பிரபஞ்ச விலட்சணரா யிருங்கள், நாம் சர்வகன்மமும்விட்டு வீராசனமா யிருக்கிறோம், நீங்களும் சகலகன்மங்களையு மொழிந்து ஓராசனத்திலிருங்கள், நாம் ஞானப் பிரகாசங் கொண்டு அந்தகாரமலம்போக ஞானக்கினியை ஒருகையிற் றரித்திருக்கிறோம், நீங்களும் ஞானப்பிரகாசத்தின லந்தகாரமலத்தைப் போக்கிக் கொள்ளுங்கள், நாம் இருபத்தைந்துபடி யொழுங்கும்நேதிசெய்து விபரீதபாவனைநீங்கும்பொருட்டு ஒருகையில் இருபத்தைந்துமணி ஜெபதாவடங்கொண்டிருக்கிறோம், நீங்களும் அப்படியே ஜெபதாவடங்கொண்டு இருபத்தைந்துபடி யொழுங்குந்தள்ளி விபரீதபாவனை நீங்கியிருங்கள், மேலும் மோட்சார்த்தமாகிய அனுபவதரிசனமாவது ஞாதுருவான வாத்துமாஞானமான வருட்பிரகாசங்கொண்டு ஞேயமான சிவத்தை யறிவதோ, அல்லது, ஆத்மசிவ சமானத்துவமாயிரண்டாயிருப்பதோ, அல்லது, எங்குஞ் சச்சிதானந்தப் பிரமமயமா யொன்றாயிருப்பதோவென்றுண்டாக்கிற அசம்பாவனை யொழியும்பொருட்டு ஞாதுருஞான ஞேயமாயுநிகிற திரிபுடியை விட்டிருக்கவேண்டுமென்று மூன்றுவிரலைநீட்டி இரண்டல்ல ஒன்றாயிருக்கிற சித்துமாத்திரமே நிலையென்பதுதோன்ற மேலிருவிரலையும் ஏகமாய் ஞானமுத்திரையாய் ஒருகையிற்பிடித்து அசம்பாவனையைப் போக்கியிருக்கிறோம், நீங்களுஞ் சின்மாத்திரவனுபவமே திடநிலையாயிருந்து அசம்பாவனையைப் போக்கியிருங்கள், சித்தசஞ்சலமொழியும்படி வேதாகமசம்மதியானசிவஞான

போதகத் திருமுறையை ஒருகையிற்கொண்டிருக்கிறோம், நீங்களும் வேதாகமசாஸ்திர விசாரணைசெய்து சித்தசஞ்சல மொழிந்திருங்கள், நாம் அலைவற்ற சமுத்திரம்போலும் நிலவுறைத்தீபம்போலும் மௌனாதீதமாயிருக்கிறதுபோல நீங்களும் இந்தப்படியிருந்து முத்தராவீர்களென்று சொல்லி இன்னுமொருவனுக்கியாகச் சம்பவனுக்குபதேசிக்கு முறைமையுண்டென்று ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியானவர் திருவுளம்பற்றியருளினார்.

வினா= அஃதெப்படி?

விடை= அஃதெப்படியெனின், ஓய் ஜனகாதிகளே! பிரணவாதீதமாகிய மோனத்திற் பிரணவமும், அதிற் பஞ்சசத்தியும், அதிற்குணத்திரயமானபஞ்சாதசபேதமு முண்டாயின.

வினா= அஃதெப்படியுண்டாயின?

விடை= எப்படியுண்டாயினவெனின், பிரணவாதீதத்திற் பிரணவமுண்டாயிற்று, அதில், விருத்திசத்தி, பராசத்தி, சிற்சத்தி, சிற்களாசத்தி, சின்மயசத்தியெனப் பஞ்சசத்திகளுண்டாயின, அவை குணத்திரயங்களா லொவ்வொன்று மூன்றுபேதங்களாகும்.

வினா= அவையெப்படியாகும்?

விடை= எப்படியாகுமெனின், விருத்திசத்தியின்முக்குணம் தாமத விராசத சாத்விகமென்றும், பராசத்தியின் முக்குணம் இச்சை ஞானங் கிரியையென்றும், சிற்சத்தியின்முக்குணம் சத்து சித்து ஆனந்தமென்றும், சிற்களா சத்தியின்முக்குணம் சுத்தம் சூனியம் சுபாவமென்றும், சின்மயசத்தியின்முக்குணம் யதார்த்தம் இரகசியம் அறுதியென்றும், பதினைந்துபேதமாயின. ஆனையாற்

பிரணவாதீதவஸ்துவேமோனம். அப்படிகுணத்திரயமான பஞ்சாதசபேதமும் பஞ்சபத்தியம்பிரணவமும் ஆகியமூன்றும் மூன்றுவிரல் இவ்விருவிரலும் பிரணவாதீதமான மௌனமென்று சின்முத்திரைபரக்கொண்டு நீங்களுமிந்தப்பிரகாரமிருங்க, ளென்றுசொல்லி ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி மௌனமாயிருக்கச் சனகாதிக ளனைவருமெழுந்து மகாபயபக்திவிநயத்துடன் இரண்டுதிருவடிகளைப்பூசித்துப் பிரதட்சணநமஸ்கார முதலிய சோடச வுபசாரங்களுஞ்செய்து அஞ்சலியஸ்தராய்நின்று ஸ்தோத்திரம்பண்ணினார்கள். அங்ஙனமான ஜனகாதிகளனைவரையும் வடமுகமாயிருக்கச்சொல்லி நாம் சமாதியிருந்து காட்டுகிறோம் நீங்களு மப்படியேயிருந்து பாவியுங்கள். அங்ஙனம் பாவித்தா லுங்கள் பரிபக்குவ விசேஷத்தின்படி சித்திக்கும் அங்ஙனம்சித்தியாவிட்டால் அந்தர்முகத்தைவிட்டுப் பகிர்முகமாய் நமதுதிருமுகத்தைச் சிரத்தையாகப் பாவித்திருங்கள். அப்போது அனுபவமறைப்புநீங்கும், நாம் எப்போதுமிருப்பது வீராசனம்,மிதித்திருக்கிற முயலகன் பிரணவசொரூபமானமூலமாயை, ஆணவமலத்தை அதோமுகமாக்கி வலப்பதத்தினலழுத்திச் சித்தசுத்திக்குக் காரணமாய் ஒருகையில் செபதாவடமும், சிரவணபோதனை சாதகத்திற்குக்காரணமாய் ஒருகையிற்புத்தகமும், ஒருகையில் மௌனமான ஞானமுத்திரையும், அந்தமௌனஞான முத்திரையைச் சுட்டு நாசமாக்கும்பொருட்டு ஒருகையில் அக்கினியும், இவ்வக்கினியும் தனக்கு விரோதியோடுகூட நாசமாம் பொழுது மௌனாதீதமே முடிந்த பொருளாய் அது நீயாகுமென்னு மகாவாக்கிய நிண்ணயப்படி சொல்லுக்கடங்காச் சுபாநுபவமு மல்லாததாயிருப்போம். நீங்களு மிப்படியே யிருங்க

ளென்றுதிருவாய்மலர்ந்தருளிமௌனமாயிருக்க ச்சனகாதிகளும்அந்தர்முகப்பட்டு அப்படியேபா வித்திருந்தார்கள், அங்ஙனமிருக்கஅவர்களுக்கந் த்நிலை சித்தியாமல் குருவாக்கியப்படி அவர்கள் பகிர்முகப்பட்டு ஸ்ரீ சற்குருவின் திருமுகமண் டலத்தை மூன்றரைக்கோடியுகபரியந்தம் பார்த் திருந்தபின் அந்தத்திருமுகமண்டலப்பிரசாதத் தினு லவர்களுக்குச் சகல வாவரணங்களுநீங்கி மௌனுதீத சுகசமாதிசித்தித்தது. அப்பால் ஸ்ரீ சற்குருசுவாமிகள் விழித்தருளியபின் அவர்க ளும் விழித்து அனுபவானந்தவிலாசத்தினலடங் கா மகிழ்ச்சியுடனெழுந்து பாதபூசை முதலியபி ரதட்சணநமஸ்காராதிகள்செய்து உடலாதிமூன் றுந் தத்தம்பண்ணி ஸ்தோத்திரஞ்செய்யும்படி.

அகவல்.

செயசெயபோற்றி தேசிகாபோற்றி, அநாதிநிலை யை யருளினைபோற்றி, மொழியாமொழியைமொழிந் தனைபோற்றி, கேளாக்கேள்வியுங் கேட்டனம்போற் றி, அறியாதறிந்தன் மையாபோற்றி, வேதாகமமுடி விளம்பாய்போற்றி, தேவர்க்கறிய தேவேபோற்றி, அறிவுக்கறிபொரு ளல்லாய்போற்றி, அனுபவப்பொ ருளை யகற்றினைபோற்றி, அனுபவியாவகை யளைந்த னைபோற்றி, நீயுநானு மிரண்டற்றதுவும், அதுவுமிது வு மதுவிதுவற்றதும், ஒளியுமிருளு மொளியிருளற் றதும், நாதநாதாந்தநவின்றதுமற்றதும், ஒன்றுமிரண் டு மொன்றிரண்டற்றதும், உள்ளும்புறம்பு முட்டபு றம்பற்றதும், உருவுமருவுமுருவருவற்றதும், அல்ல வென்றருளிய வத்தாபோற்றி.

என்று இந்தப்படி ஸ்தோத்திரஞ்செய்த சனகாதி ரிஷிகளை ஸ்ரீதட்சணமூர்த்தியானவர் கிருபையாகப் பார்த்துச் சிரசில் தமது திவ்வியஹஸ்தத்தைவைத்துச் சுபமாவென்று ஆசீர்வாதம் பண்ணி இஃதே சம்பவ

னுக் குபதேசிக்கு முறைமையென்று திருவுளம்பற்றி யருளினார்.

## மந்தனுக்கு உபதேசிக்குமுறை.

வின= இனி மந்தனுக் குபதேசிக்கு முறைமை யெப்படி?

விடை= மந்தனுக்கருக்மான இதிகாசபுராண சித்தாந்தமான விஷயலய சமாதியை யனுக்கிரகிக்கு முறைமை யெப்படியெனின், ஓய் ஜனகாதிகளே விஷயத்தைவிட்டால் இதைப்பார்க்கு மிந்திரியமும் நினைக்குங் கரணங்களும் அறியுஞ் சீவனு மில்லையென்பது.

வின= இவைகளில்லையோ?

விடை= இவைகளில்லையோவெனின், திரிபுடிகளையறியுஞ்சாட்சி ஞானமில்லை.

வின= சாட்சிஞானமில்லையோ?

விடை= சாட்சிஞான மில்லையோவெனின், இந்தஞானங்கொண்டறிகிற விராட்டு இரணியகர்ப்பம் மாயையான சரீரத்திரயமுமில்லை.

வின= மாயையில்லையோ?

விடை= மாயையில்லையோவெனின், இதிற் பிரதிபிம்பிக்கு மீஸ்வரனில்லை.

வின= ஈஸ்வரனில்லையோ?

விடை= ஈஸ்வரனில்லையோவெனின், இவற்றையுமறியும் பிரஞ்ஞானமில்லை.

வின= இந்தஞானமில்லையோ?

விடை= இந்தஞான மில்லையோவெனின், இதையறியுஞ் சத்து சித்து ஆனந்தமில்லை.

வினா— ஆனந்தமில்லையோ?
விடை— ஆனந்தமில்லையோவெனின், ஆனந்தபரவச பரப்பிரமமுமில்லை.
வினா— இவைகளில்லையோ?
விடை— இவைகளில்லையோவெனின், இவற்றையறியுஞ் சர்வசாட்சி ஞானமில்லை.
வினா— சர்வசாட்சி ஞானமில்லையோ?
விடை— இஃதில்லையோவெனின், இதையறியுஞ் சுத்தம் சூனியம் சுபாவமில்லை.
வினா— சுபாவமில்லையோ?
விடை— சுபாவமில்லையோவெனின், ஒழிவில்லை.
வினா— ஒழிவில்லையோ?
விடை— ஒழிவில்லையோவெனின், இதையறியு மதீத ஞானமில்லை.
வினா— அதீதஞானமில்லையோ?
விடை— அதீதஞான மில்லையோவெனின், இதையறியும் யதார்த்தம் இரகசியம் அறுதியில்லை.
வினா— அறுதியில்லையோ?
விடை— அறுதியில்லையோவெனின், ஒடுக்கமில்லை.
வினா— ஒடுக்கமில்லையோ?
விடை— ஒடுக்கமில்லையோவெனின், மோனமில்லை.
வினா— மோனமில்லையோ?
விடை— மோனமில்லையோ வெனின், மோனமுதல் ஸ்தூலபரியந்தமாகிய இருபத்தைந்துமின்றி மவுனமாயிருப்பன். இந்தப்படி எளிதாய்மந்தனுக்குபதேசிக்கவேண்டியதென்றறிக.

முன்சொன்ன வைந்ததிகாரிகளுக்கும் ஐந்துவிதசமாதியுஞ் சொல்லப்பட்டது.

வினா— இந்தச்சமாதிகளுக்குப்பலமென்ன?
விடை— இதையொருவனுக் குபதேசிக்கும்போதொருவன் கேட்டபலன் எண்ணிறந்த சரீரங்களிற்

செய்த பாதகங்கணீங்கி விராட்டுக்கதிபதியா பிரமனானவன், இந்தச்சமாதி நமக்கு வேண்டுமென்றவன் இந்திரியங்களாற்செய்த அதிபாதகமெல்லாம்நீங்கி இரணியகர்ப்பத்திற் கதிபதியான விஷ்ணுவானவன், ஆசிரியரிடமாயிதைச் செவிப்புலனாக்கேட்டவன் அந்தக்கரணத்தினால்வரும் அதிபாதகங்கணீங்கி அவ்வியாகிருதத்திற் கதிபதியான வுருத்திரமூர்த்தியானவன், இதைச்சாதிக்கவேண்டுமென்று பிரயத்தினஞ்செய்தவன் அஞ்ஞானதி அவித்தையாஞ்ஞானநீங்கி அவ்வியத்தத்திற் கதிபதியான மகேசுரனானவன், இதை இரவுபகலா யனுஷ்டித்தவன் சின்மயசத்தி யுபாதிநீங்கிச் சுத்தத்திற் கதிபதியான சதாசிவனானவன், இந்தச்சமாதி சாட்சாத்காரம் பெற்றவன் சர்வவுபாதியுநீங்கித் தானே தானாயிருப்பனென்று ஸ்ரீதட்சணாமூர்த்தியும் ஜனகாதிகளுக் கனுக்கிரகஞ்செய்தாரென்று சூதமகாமுனிவர் நைமிசாரணியமுனிவர்களுக்குச் சொல்லி ஓய் ரிஷிகளே நீங்கள் அபக்குவர்களுக்குச் சொன்னால் இகபரமற்று முத்தியில்லாமற்போவீர்கள் முற்சொல்லிய பக்குவர்களுக்கு மாத்திரஞ் சொல்லுங்களென்றுசொல்ல அதுகேட்டு அவர்களும் மகாபாக்கியமென்றெழுந்து சூதமுனிவருக்குப் பூசை நமஸ்காராதி வந்தனை வழிபாடுகள்செய்து குருகுலவாசமாயிருந்தார்கள் இந்தச்சாஸ்திரமும் சாஸ்திரானுபவமும் கிருபையினா லனுக்கிரகஞ்செய்த அதிவர்ணாசிரம னாசிரியராகிய சௌபாக்கிய குரு பாதாரவிந்தமேகெதி.

## குருஸ்துதி - வெண்பா.

நானேநீயோநா னேனானீயேநீ
யானதெல்லாம்பொய்யென் றகற்றியே-மோனமது
மில்லையென்றுனேதென்று லென்றால்யானெண்ணுவ
நல்லசவுபாக்கியனே நான். [னே

கலிவிருத்தம்.

நீளனேகஞ் சமயநெறியெலா
மாளநேரிடும் வன்பிறவித்துயர்
மீளவேயத்துண் மெய்க்குமெய்காட்டரு
ளாளனேயறி வானந்தரூபனே.

அப்பால் நைமிசாரணிய முனிவர்கள் சூதமுனிவ ரைப்பார்த்து சுவாமி இதுவரையில் அஸ்யுந்திருவடி தீட்சை யனுக்கிரகஞ்செய்தீரோ இனி அறுதித்திருவடி தீட்சையாவதென்ன அதை எங்களுக்கருளிச்செய்ய வேண்டுமென்று கேழ்க்கச் சூதமாமுனிவர் சொல்லுகிறார். ஓய் முனிவர்களே, ஆசிரியன் நித்தியகர்மமுடித்துக்கொண்டு முன்சொன்ன சுபதினத்தில் அர்த்தராத்திரியில் அந்தத்தானத்தை முன்போல் மெழுகித் தட்சிணாமூர்த்தியை அர்ச்சித்துத் தெண்டனிட்டு ஆசிரியர் கிழக்குமுகமுஞ் சீஷன் வடக்குமுகமுமாயிருந்து ஆசிரியரிருதயத்தில் மோனதீதனாய் ஞானக்கினியைப்பாவித்து ஓம் விராட்டு சுவாகா, ஓம் இரணியகர்ப்ப சுவாகா, ஓம் மாயை சுவாகா, ஓம் ஈஸ்வர சுவாகா, ஓம் பிர்ம்ம சுவாகாவென்று ஆகுதிபண்ணி அந்தச்சாம்பலை ஞானாநந்த சமுத்திரத்தில் நனைத்து ஒருபிண்டமாக்கி அந்தப்பிண்டமான ஸ்தூலசரீரத்தைச் சத்தாகவும், சூட்சுமசரீரத்தைச் சித்தாகவும், காரணசரீரத்தை ஆனந்தமாகவும், அபிமானியைப் பரப்பிர்ம்மமாகவும், சாட்சியைச் சர்வசாட்சியாகவும், பாவித்து ஞானக்கினியைச் சீஷனிருதயத்தி லாவாகித்து ஒருமொழிவாக்கியத்தை யுபதேசித்து அதைப் பொருட்படுத்திக்கொடுத்து அந்தத் தியானத்தின்படி சீஷனை யனுஷ்டிக்கச்செய்யவேண்டும்.

வினா— அவ்வனுஷ்டானவகை யெப்படி?

விடை— அந்தத்தியானத்தைக் குருவாகத் தியானித்து ஜலத்தைச் சச்சிதானந்தமாகப் பாவித்து மூடிப்பிரணவத்தினாற் செபித்துப் புரோட்சித்துக்

கொண்டு விபூதியைச் சுத்தசூன்யமாகப் பாவித்துச் சலம்விட்டுக்குழைத்து முன்போலவே பன்னிரண்டு தானத்திலும் அந்த மந்திரத்தினுற்றரித்துப் புரோட்சித்துக்கொண்டு பிரணவத்தினால் ஆசமனம் கரனியாசம் அங்க நியாசஞ்செய்து பிரணவத்தினால் மூன்றுதிரமும், தட்சிணாமூர்த்தியே நமாவென்று மூன்றுதிரமும், சுத்தம் சூன்யம் சுபாவமென்று மூன்றுதிரமும் ஆக ஒன்பதுதிரந் தர்ப்பணஞ்செய்து முன்போலப் பின்பும ஆசமனம் அங்கநியாசம் கரனியாசம் தர்ப்பணம்பண்ணி அந்தச்சலத்தில் பிரணவத்தைப் பதினறுதிரஞ் செபித்துப் புரோசித்துக்கொண்டு மாயாஞ்ஞானத்தை நாசியில்வாங்கிப் பெருவிரல்விட்டு அவகுண்டனம்பண்ணி ஒன்பதுதிரந்தற்பனம்பண்ணி நூற்றெட்டுமந்திரமும் நித்தியசெபமுஞ் செய்து தட்சிணாமூர்த்தியைத் தெண்டன்பண்ணிக் குருவைத் தானக்கியானித்து அவர்சந்நிதானத்தில் உடல் பொருள் ஆவி மூன்றுந் தத்தஞ்செய்து அவரா லாசீர்வாதமும் விபூதிப்பிரசாதமும்பெற்று அவரை இரண்டாமுறைதெண்டனிட் டொருசந்தியாயிருந்து கோவிலில் தீபம்பார்த்து தெர்ப்பைசயனத்திற் சயனிக்கச் செய்யவேண்டியது. இஃதே அறுதித்திருவடி தீட்சையென்பது.

## ஒருமொழிக்கர்த்தம்.

### குருஸ்துதி - விருத்தம்.

அறிவினுக் கறிவாந்தன்மை
யனுக்கிர கித்தாய்போற்றி
சிறியனேன் சிறுமைதீர்த்துச்
செம்பத மருள்வாய்போற்றி

பிறிவரும் பொருளாயெங்கும்
பேதமற் றிருந்தாய்போற்றி
யறிவரு மறிவானந்த
வருட்டிருப் பாதம்போற்றி.

வினா= ஒருமொழிக்கர்த்தமென்ன?

விடை= அது நீயானுயென்பது, அதுவென்றது அவாந்தரவாக்கியமும், நீயென்றது மகாவாக்கியமும், ஆனுயென்றது நிவிர்த்திவாக்கியமுமாம். இதற்கர்த்தம் இதுவல்லாமைக்கு அதுவென்று பெயர்.

வினா= அஃதெப்படி?

விடை= தேகந்தானனவனைத் தேகமல்லவென்றுலிந்திரியந்தானுவன், இந்திரியமன்றெனிற் கரணந்தானுவன், கரணமன்றெனிற் பிராணன்றானுவன் பிராணனன்றெனி லவித்தைதானுவன், அவித்தையன்றெனிற் சீவன்றானுவன், சீவனன்றெனிற் கூடஸ்தன்றானுவன்கூடஸ்தனன்றெனில்விராட்டுதானுவன், விராட்டன்றெனில் இரணியகருப்பந்தானுவன், இரணியகர்ப்பமன்றெனில் மாயைதானுவன், மாயையன்றெனி லீஸ்வரன்றானுவன், ஈஸ்வரனன்றெனிற் பிரமந்தானுவன், பிரமமன்றெனிற் சத்துதானுவன், சத்தன்றெனிற் சித்துதானுவன், சித்தன்றெனி லானந்தந்தானுவன், ஆனந்தமன்றெனில் பரப்பிரமந்தானுவன், பரப்பிரமமன்றெனிற் சர்வசாட்சிதானுவன், சர்வசாட்சியன்றெனிற் சுத்தந்தானுவன், சுத்தமன்றெனிற் சூன்யந்தானுவன், சூன்யமன்றெனிற் சுபாவந்தானுவன், சுபாவமன்றெனில் ஒழிவுதானுவன், ஒழிவன்றெனி லதீதந்தானுவன், அதீதமன்றெனில் யதார்த்தந்தானுவன், யதார்த்தமன்றெனில் இரகசியந்தானுவன், இரகசியமன்றெனின் அறுதிதா

னுவன், அறுதியன்றெனில் ஒடுக்கந்தானுவன், ஒ டுக்கமன்றெனில், மோனந்தானுவன்; மோனமன் றெனில் மோனுதீதமாகிய ஸ்வஸ்வரூபமாகப்பி ரகாசிப்பன். இதுவரையிற்கூறிய, தானுனபொ ருள் வேதாகமங்களிற் சொல்லிய இதுவென்ற பொருள், இவையெல்லாந் தானன்றென்றபொ ருள் வேதாகமங்களுக் கதீதமாகிய அதுவென்ற பொருள், இந்தமெய்ப்பொருளே அதுவென்ற து, இது அவாந்திரவாக்கியம். நீயென்றதற்கர்த் தம் மேற்கூறிய அதுவென்னும் பொருளை நீ யென்றது இது மகாவாக்கியம். இவ்வனுபவத்தி னுல் விபரீதபாவனைபோம். ஆனுலென்றதற்கர்த் தம் இந்தப்பொருளிற் சந்தேகம்வந்த அசம்பா வனையைப் போக்குகிற ஆப்தவாக்கியமான நி விர்த்திவாக்கியம், இவற்றுள், வேதாகமங்களாற் றெளியக்கேட்ட பரோட்சமான சாட்சாத்கார நிச்சயஞானமே அவாந்திர வாக்கியமென்றும், சற்குரு வுபதேசத்தினுல் அனுக்கிரகம்பெற்ற தே மகாவாக்கியமென்றும், பெரியோர்களாற் சொல்லப்பட்ட ஆப்தவாக்கியமே நிவிர்த்திவாக் கியமென்றுஞ் சொல்லப்படும், இவ்விருபத்தைந் துந் தானுயிருக்கவும், அன்னியமாயிருக்கவும், அந்தரியாமியாயிருந் திதுகளைச் சேட்டிப்பிக்க வும், இதுகளில் வியாபகமாயிருக்கவும், இதுக ளெல்லா மற்றிருக்கவுங்கூடும்.

## சைதன்யவனுபவம்.

வினு — சைதன்யவனுபவமெப்படி?

விடை — ஒருவேளை புத்திரமித்திர களத்திராதிகளை

தானென்றபிமானித்து அவர்கள்படுஞ்சுகதுக்கங்களை நிதமுந்தன்பேரி லேறிட்டுக்கொண்டு அவர்கள் தானனதுபோல் இவ்விருபத்தைந்துந் தானுயபிமானித்து இவற்றால் வருஞ் சுகதுக்கங்கள் தனதாகப் பாவித்து இதுகள் தானுயிருக்கவும் கூத்தாடி பலவேடம்போட்டு விநோதமாய் ஆடினாலு மவ்வேடந்தானல்லது விநோதியே தானனதுபோல இவ்விருபத்தைந்துந்தானய் விவகரித்தாலும் இதுகள் தானல்லாது மோனாதீதமான்தானேதானென் றன்னியமாயிருக்கவும் . பொம்மலாட்டக்காரன் சூஸ்திரதாரியா யிருந்தாட்டுகிறதுபோல இவ்விருபத்தைந்திற்கு மதிஷ்ட்டான தேவதையாயிருந்து சேஷ்ட்டிப்பிக்கவும் நான் குபூதத்திலு மாகாசம் வியாபகமா யிருக்கிறதுபோல் இவ்விருபத்தைந்திலும்வியாபகமாயிருக்கவும் பழுதையென் றறிந்தவுடன் பாம்பென்பின்றிப் பழுதைமாத்திரமாயிருந்ததுபோலமோனாதீதமான தன்னையறிந்தவுடன் இவ்விருபத்தைந்துமித்தையாகித் தானேயிருக்கவுங் கூடும். இவ்வனுபவமைந்தும் விதேககைவல்யபரியந்தந் தோற்றுமென்றறிக, இஃதேமுத்திநிலை.

குருஸ்துதி - விருத்தம்.

அறிவினையைந்தாக் வறிவித்தவர்சேபோற்றி
அறிவினலொன்றுமுன்னதிருந்திடவமைத்தாய்போற்
அறிவுபேரின்பமாக வளித்திடுமத்தாபோற்றி [றி
அறிவருமறிவானந்த வருட்டிருப்பாதம்போற்றி.



## ஞானசதுஷ்டயம்.

ஸ்ரீ கயிலாசபதியாகிய தட்சணாமூர்த்தியானவர் ஜனகாதிகளாலவருக்கும் வேதாகமங்களிலும்பலசாஸ்திரங்களிலுமுள்ள வாக்கியச்சம்பிரதாயத்தையும் ஐவகைச்சமாதிகளையும் அதிகாரிகளனுசாரமாய் அறியுந்திருவடி அறுதித்திருவடி தீட்சைகளையு மனுக்கிரகித்து அவைக்கனுகூலமாக மேல்நிற்கவேண்டிய ஞானநிலையைச் சாம்பிரதாயமாய்த் திருவுளம்பற்றியருளுகின்றார்.

வினா— ஞானசதுஷ்ட்டயமாவதென்ன?

விடை— நிச்சயம், சமாதிசம், சாட்சாத்காரமென ஞானம் நான்குவிதமாயிருக்கும்.

வினா— இவற்றுள் நிச்சயமாவதென்ன?

விடை— குருமுகமாய் விபரீதம்போக வேதாகமங்களைத் தெளியக்கேட்டல் சிரவணம், அங்ஙனங் கேட்டபொருளை விட்சேபம்போக நன்றாய்ப்பரிசீலனம்பண்ணி மனத்திற் றரிக்கப்பட்டு வாக்கினாற் பிரசங்கித்தல் மனனம், அங்ஙனந்தரித்ததை அசம்பாவனைபோகச் சேடித்துநின்ற பொருள் நாமேயென்னும் நிச்சயம்பிறத்தல் நிதித்தியாசனம், இம்மூன்றிற்கும் மூன்றுவிரோதமுண்டு.

வினா— அவையெவை?

விடை— சிரவணத்திற்குச் சிரத்தையின்மையும், மனனத்திற்கு விசாரமின்மையும், நித்தியாசனத்திற்கு நிச்சயமின்மையும் விரோதமாம்.

வினா— இம்மூன்றிற்கும் நிவிர்த்தியெப்படி?

விடை— சிரத்தையின்மை ஆசிரியராலும் விசாரமின்மை தேவதாவுபாசனையினாலும், நிச்சயமின்மை சத்துக்களாலுந் தீரவேண்டும். நிதித்தியாசனமாகிய நிச்சயம்பிறந்ததே நிச்சயஞானமென்றும் அஃதுள்ளவனே பரோட்சமான நிச்சயஞானியென்றுமறிக.

வினா— சமாதிஞானமாவதென்ன?

விடை— தொம், தது, அசி, அதி, நிசம், என்று, ஐந்துபதம், அவற்றுள் ஒவ்வொருபதத்திற்குக்கேவல சகல சுத்தமெனவவத்தைமூன்று, அதில் ஒவ்வொன்றிற்கு, மூன்றாகவவத்தை ஒன்பது ஆ அவத்தைகள் பன்னிரண்டாய் ஐந்து பதத்திற்கும் அவத்தைகள் அறுபதாம்.

வினா— அவையெப்படி?

விடை— தொம்பதத்தில் மனோநாசமானவந்தகாரமே கேவலம், மனோசஞ்சலமே சகலம், அவ்விரண்டையுமறிந்தவறிவே சுத்தம். ஆ (ங)

வினா— ஆனால் தொம்பதகேவலத்தில் மூன்றவத்தையெது?

விடை— அந்தகாரந்தானாயிருப்பதே கேவலசாக்கிரம், அந்தகாரம் நீங்கி நின்றதே கேவல சொப்பனம், அந்தகாரலயமே கேவலசுழுத்தி. ஆ (ங)

வினா— சகலத்தில் மூன்றவத்தையெது?

விடை— சித்தசஞ்சலந் தானாயிருப்பதே, சகலசாக்கிரம், சித்தசஞ்சல நீங்கிநின்றதே சகலசொப்பனம், சித்தசஞ்சலலயமே சகலசுழுத்தி. ஆ (ங)

வினு— சுத்தத்தில் மூன்றவத்தையெது?

விடை— சிவன் ருனுயிருப்பதே சுத்தசாக்கிரம், சிவ ஊ நீங்கிநின்றதே சுத்தசொப்பனம், சிவத்துவ ல்யமே சுத்தசுழுத்தி. ஆ (ந)

வினு— தற்பதத்தி லெப்படி?

விடை— மாயாந்தகாரமே கேவலம், சர்வஞ்ஞத்வசாமர்த்தியமே சகலம், பிரம்சொரூபமே சுத்தம். ஆ (ந).

வினு— தற்பதகேவலத்தில் மூன்றவத்தையெது?

விடை— மாயாந்தகாரந் தானுனதே கேவல சாக்கிரம், மாயாந்தகார நீங்கிநின்றதே கேவலசொப்பனம், மாயாந்தகார லயமே கேவலசுழுத்தி. ஆ (ந)

வினு— சகலத்தில் மூன்றவத்தையெது?

விடை— சர்வஞ்ஞத்வ சாமர்த்தியந்தானுனதே சகல சாக்கிரம், சர்வஞ்ஞத்வசாமர்த்திய நீங்கிநின்றதே சகலசொப்பனம், சர்வஞ்ஞத்வலயமே சகல சுழுத்தி ஆ (ந)

வினு— சுத்தத்தில் மூன்றவத்தையெது?

விடை— ஈஸ்வரத்வந்தானுனதேசுத்தசாக்கிரம், ஈஸ்வரத்வ நீங்கிநின்றதே சுத்தசொப்பனம், ஈஸ்வரத்வலயமே சுத்தசுழுத்தி. ஆ (ந)

வினு— அசிபதத்திலெப்படி?

விடை— ஆனந்தபரவசமே கேவலம், சித்ரூபவிலாசமே சகலம், சர்வசாட்சியேசுத்தம். ஆ (ந)

வினா— அதிபதகேவலத்தில் மூன்றவத்தையெது?

விடை— ஆனந்தபரவசந் தானானதே கேவலசாக்கிரம் ஆனந்தபரவச நீங்கினின்றதே கேவலசொப்பனம் ஆனந்தபரவசலயமே கேவலசுழுத்தி. ஆ. (ங)

வினா— சகலத்தில் மூன்றவத்தையெது?

விடை— சித்ரூபவில்ாசந் தானானதே சகலசாக்கிரம், சித்ரூபவிலாச நீங்கினின்றதே சகலசொப்பனம், சித்ரூபவிலாசலயமே சகலசுழுத்தி. ஆ. (ங)

வினா— சுத்தத்தில் மூன்றவத்தையெது?

விடை— பரப்பிரமந்தானானதே சுத்தசாக்கிரம், பரப்பிரம நீங்கினின்றதே சுத்தசொப்பனம், பரப்பிரமலயமே சுத்தசுழுத்தி. ஆ. (ங)

வினா— அதிபதத்திலெப்படி?

விடை— சுபாவமேகேவலம், சர்வசூன்யநிராலம்பமேசகலம், அதீதசாட்சியேசுத்தம். ஆ. (ங)

வினா— அதிபதகேவலத்தில் மூன்றவத்தையெது?

விடை— சுபாவந்தானானதே கேவலசாக்கிரம், சுபாவ நீங்கினின்றதே கேவலசொப்பனம், சுபாவலயமே கேவலசுழுத்தி. ஆ. (ங)

வினா— சகலத்தில் மூன்றவத்தையெது?

விடை— சர்வசூன்யநிராலம்பந் தானாயிருப்பதேசகல சாக்கிரம், சர்வசூன்யநிராலம்ப நீங்கினின்றதே சகலசொப்பனம், சர்வசூன்ய நிராலம்பலயமே சகலசுழுத்தி. ஆ. (ங)

வினா— சுத்தத்தில் மூன்றவத்தையெது?

விடை— ஒழிவுதானானதே சுத்தசாக்கிரம், ஒழிவு நீங்கினின்றதே சுத்தசொப்பனம், ஒழிவுலயமே சுத்த சுழுத்தி. ஆ. (ங)

வினா — நிசபதத்திலெப்படி?
விடை — அறுதியே கேவலம், யதார்த்தவனுபவமே சகலம், மோனமே சுத்தம். ஆ (௩)
வினா — நிசபதகேவலத்தில் மூன்றவத்தையெது?
விடை — அறுதி தானனதே கேவலசாக்கிரம், அறுதி நீங்கிநின்றதே கேவலசொப்பனம், அறுதிலயமே கேவலசுழுத்தி ஆ (௩)
வினா — சகலத்தில் மூன்றவத்தையெது?
விடை — யதார்த்தவனுபவந் தானனதே சகலசாக்கிரம், யதார்த்தவனுபவம் நீங்கிநின்றதே சகல சொப்பனம், யதார்த்தவனுபவலயமே சகல சுழுத்தி. ஆ (௩)
வினா — சுத்தத்தில் மூன்றவத்தையெது?
விடை — ஒடுக்கந் தானனதே சுத்தசாக்கிரம், ஒடுக்க நீங்கிநின்றதே சுத்தசொப்பனம், ஒடுக்கலயமே சுத்தசுழுத்தி. ஆ (௩)
ஆ பதம் ஐந்திற்கும் அவத்தை அறுபது.

## திருஷ்டாந்தபஞ்சகம்.

வினா — திருஷ்டாந்தபஞ்சகமாவதென்ன?
விடை — அஃதென்னவெனின், முதலாவது, தொம்பதவாச்சியமான தூலாதிசரீரத்திரயமுஞ் சீவனுந் தள்ளி இலட்சியமானசாட்சியே தானாயிருப்பதற்குத் தசமதிருஷ்டாந்தம்.
வினா — அஃதெப்படி?
விடை — பத்துப்பேர் ஆற்றிலிறங்கிக்கரையேறித் தன்னைத்தவிர ஒருவன் ஒன்பதுபேரை யெண்ணிப் பார்த்து பத்தாவானைக் காணுமென்றழ ஒருவன்வந்து ஒன்பதுபேரையு மெண்ணச்சொல்லி

உன்னோடுபத்துப்பேரென்றுசொல்ல அவன்கண்டுசந்தோஷித்ததுபோல தனதுநிஜசொரூபமான சாட்சியையறியாமற் கலங்கிக் குருசந்நிதானத்தில் வந்தமையைக்கண்டு ஸ்ரீ சற்குருவும் தத்துவங்களான சரீரத்திரயத்தையும் சீவனையும் ஒவ்வொன்றாய்த்தள்ளிச் சேஷித்தசாட்சியேநீயென்ன அதுதானாயிருப்பது.

இரண்டாவது, தற்பதவாச்சியமான விராட்டு இரணியகர்ப்ப மாயையாகிற சரீரத்திரயமு மீஸ்வரனுநீங்கி இலட்சியமானபிரம்மமே தானாயிருப்பதற்கு ரச்சுசர்ப்ப திருஷ்டாந்தம்.

வினா — அஃதெப்படி?

விடை — சந்தியாகாலத்திற்கிடந்தபழுதையையொருவன் கண்டுமயங்கிப் பாம்பென்றுபயந்தும் பின்றெளிந்து பார்க்குமிடத்திற் பாம்பென்பதுபோய்ப் பழுதையே யானதுபோல அவிவேகமாகிய அஞ்ஞானத்தில் நாமரூப வர்ணாசிரம வர்ணதர்மமாய்த் தோன்றின பிரபஞ்சம் விவேகஞானத்திற்போய யாய் சச்சிதானந்தமே மெய்யானபிரமந் தானாயிருப்பது.

மூன்றாவது, அசிபதவாச்சியமான சச்சிதானந்த வுபாதித்திரயமும் பரப்பிரமமுநீங்கி இலட்சியமான சர்வசாட்சியே தானாயிருப்பதற்குச் சாதிவியாப்தி திருஷ்டாந்தம்.

வினா — அஃதெப்படி?

விடை — கோவின்சாதி யேகமாயிருக்குங்கொம்புகால் முதலிய அவயவ வர்ணவியாப்தி நானாவாய் சாதியை விட்டிராததுபோலச் சர்வசாட்சி யேகமாயிருக்கும் நானாவாகியசச்சிதானந்த மஃதை விட்டிராதென்று சச்சிதானந்தத்தைவிடாமற் சர்வசாட்சியையறிந்து அது தானாயிருப்பது.

நான்காவது, அதிபதவர்ச்சியமான - சுத்தம் - சூன்யம் - சுபாவத்திரயமும் ஒழிவுநீங்கி இலட்சியமான அதீதசாட்சியே தானயிருப்பதற்கு நானநாமதிருஷ்டாந்தம்.

வினா = அஃதெப்படி?

விடை = பிள்ளைக்குத்தகப்பன்பேரனுக்குப்பாட்டன் தகப்பனுக்கு மகனென்று ஒருவனுக்கு நானநாமம்வந்தாலும் அவை யொருவனுக்கே யானதுபோல அதீதத்திற்குச் சத்ரூப நீங்கினபடியால் சுத்தமென்றும், சித்ரூபநீங்கினபடியாற் சூன்யமென்றும், ஆனந்தரூப நீங்கினபடியா லொழிவென்றும், நாமம்வந்தமையால், நானநாமமுமதீதத்திற்கே யென்றறிந்து அவ்வதீதந்தானயிருப்பது.

ஐந்தாவது, நிசபதவர்ச்சியமான யதார்த்தம் - இரகசியம் - அறுதித்திரயமும் ஒடுக்கமுநீங்கி இலட்சியமானமோனமாயிருப்பதற்கு யதார்த்ததிருஷ்டாந்தம்.

வினா = அஃதெப்படி?

விடை = சூரியனுக்கு உஷ்ணப்பிரபையும், சந்திரனுக்கமிர்தசீதளமு மியற்கையா யிருப்பதுபோல மோனத்திற்கு யதார்த்தமியற்கையாகையால் யதார்த்தம் - இரகசியம் - அறுதி - ஒடுக்கம் - இந்நான்கும் மோனத்திற்கே யியற்கையென்றறிந்து மோனந் தானயிருப்பது.

வினா = வஸ்து மோனநிஷ்டமென்பதெப்படி?

விடை = சாமவேதமகாவாக்கியம், அது நீயானய், அதிலிசமென்றதுபதம், அவற்றுள் அதுவென்றது தற்பதம், இது அவாந்தரவாக்கியம், உபாதி ஈஸ்வரன், விலட்சணம் பிரமம்.

நீயென்றது தொம்பதம், இது மகாவாக்கியம், உபாதி சிவன், விலட்சணம் கூடஸ்தர்.

ஆனுவென்றது அசிபதம், இது நிவிர்த்திவாக்கியம், உபாதி பரப்பிரமம், விலட்சணம் சர்வசாட்சி.

அதியென்றது அசிபதம், இது சத்தியவாக்கியம், உபாதி ஒழிவு, விலட்சணம் அதீதசாட்சி.

நிசமென்றது நிசபதம், இதுயதார்த்தவாக்கியம், உபாதி, ஒடுக்கம், விலட்சணம், மோனம், இதுவென்றது வேதாகமங்களாற் சொல்லப்பட்டபொருள், அதுவென்றது வேதாகமங்களுக் கதீதமாகியபொருள், இதுவே அவாந்தரவாக்கியம், இந்தப்பொருளையே நீயென்றதுமகாவாக்கியமும், இதிற் சந்தேகமனனப்பிரவிர்த்திவராதவகைக்குச் சொன்னது நிவிர்த்திவாக்கியமும், இதில் அசத்தியத்வம்பிறவாம லிஃதேசத்தியமென்னு மனுபவஞ் சித்திக்கும்படிசொன்னது சத்தியவாக்கியமும், இந்தச் சத்தியவஸ்துவில் யதார்த்தசுவானுபவமுஞ் சித்திக்கும்படிசொன்னது யதார்த்தவாக்கியமுமென்றறிக. இவ்வனுபவமே சமாதிஞானமென்றும், அஃதுள்ளவனே அபரோக்ஷமான சமாதி ஞானியென்றுமறிக.

வினா — சகசஞானமாவதெது?

விடை — ஒருவிடயத்தைப் பகிர்முகத்திலும் அந்தர்முகத்திலு மதிமோகமாய்ப் புசிக்கையிலும் மகாபயத்திலும் தனதுசுவானுபூதி நீங்காமலிருப்பது சகசஞானம்.

வினா — அஃதெப்படி?

விடை — முற்கூறிய விருபத்தைந்துபடி யொழுங்குங் கண்டு நீங்கிநின்றஞானம் எஃதோ அஃதே அந்தர்முகமாய் விலட்சணமாயிருந்ததுவும் பகிர்முகமானவிடத்து இருபத்தைந்திலும்எப்போதும் விட்டுநீங்காமலிருந்ததுவு மென்றிருப்பது.

வினா— அஃதெப்படி?

விடை— அதீதமாகிய இஞ்ஞானமே பகிர்முகமாய் மோனந் தானுயிருந்தபோது மோனஞானம், ஒடுக்கத்துடன்கூடி லொடுக்கஞானம், அறுதியுடன்கூடி லறுதிஞானம், இரகசியத்துடன்கூடில் இரகசிய ஞானம், யதார்த்தத்துடன் கூடில் யதார்த்தஞானம், அதீதத்திற்சேரி லதீதஞானம், ஒழிவிற்பொருந்தி லொழிவுஞானம், சுபாவத்திற்பொருந்தில் சுபாவஞானம், சூன்யத்திற்பொருந்திற் சூன்யஞானம், சுத்தத்திற் பொருந்தில் சுத்தஞானம், சர்வசாட்சியோடுகூடில் சர்வசாட்சிஞானம், பரப்பிரமத்தோடுகூடில் பரப்பிரம ஞானம், ஆனந்தரூபத்தோடுகூடி லானந்தஞானம், சித்ரூபத்தோடுகூடில் சித்ரூபஞானம், சத்ரூபத்தோடு கூடிற் சத்ரூபஞானம், பிரமத்துடன்கூடில் பிரமஞானம், ஈஸ்வரனோடுகூடிலீஸ்வரஞானம், மாயாரூபத்துடன்கூடில் மாயாஞானம், இரணியகருப்பத்துடன்கூடி லிரணியகாப்பஞானம், விராட்டுருவத்திற்சேரில் விராட்டுருவஞானம், சாட்சியோடுகூடில் சாட்சிஞானம், சிதாபாசனோடுகூடிற் சிதாபாசஞானம், அவித்தையோடுகூடி லவித்தைஞானம், பிராணனோடுகூடில் பிராணஞானம், குணங்களோடுகூடிற் குணஞானம், இந்திரியங்களோடுகூடி லிந்திரியஞானம், விடயங்களோடுகூடில் விடயஞானம், பகிர்முகமாகிற் பகிர்முகஞானம், அந்தர்முகமாகிலந்தர்முகஞானம், விடயமோகமாகில்மோகஞானம், மகாபயமாகில் பயஞானம், நினைவிலிருக்கில் நினைவுஞானம், மறதியாகில் மறதிஞானம், சாக்கி

ரமாகில் சாக்கிரஞானம், ஆகி இப்படியெப்போதும்விட்டு நீங்காதிருந்தபடியா லிந்தஞானமே நிலையென்று ஸ்ரீ தட்சணாமூர்த்தியுஞ் சனகாதிகளுக்குபதேசித்துச் சின்முத்திரையுங் காட்டியருளினார். ஆதலால் ஓய் நைமிசாரணியவாசிகளே இந்த ஞானோபதேசக் கிரமப்படியடைந்த சிஷனுக்கு ஞானியென்றுபெயர். இஃதே சகசஞானமென்றும் இவ்வனுபவமுள்ளவனே சகசஞானியென்றும் சீவன்முத்தனென்று மறிவீர்களாக.

வினா= சாட்சாத்காரஞானமாவதெது?

விடை= சர்வோதயமாய் உதயாஸ்தமன ரகிதமாய் நித்தியப்பிரகாசமாய் அசம்பாவனை விபரீதபாவனையின்றி நித்தியநிரதிசயசுகமாய்ப்பிரகாசிக்கும் இவற்றுள் நிச்சயஞானத்திற் சத்தாவரணமும், சமாதிஞானத்திற் சித்தாவரணமும், சகசஞானத்திலானந்தாவரணமும்போம், இவ்வானந்தம்விடுதலும் பற்றுதலுமாயிருக்கும், சாட்சாத்காரதிசையில் விட்டுநீங்காமல் நித்தியானந்தகெம்பீரமாயிருக்கும்.

வினா= அஃதெப்படியிருக்கும்?

விடை= மகாதரித்திரனைச் சார்வபூமனாக ராஜசிம்மாசனத்தில்வைத்தா லவனுக்குவருஞ் சந்தோஷம்போலவும், பிறவிக்குருடனுக்குக் கண்டெரிந்தா லவனுக்குவருஞ் சந்தோஷம்போலவும், தீராவியாதியாளனுக்கு வியாதிதீர்த்தா லவனுக்குவருஞ் சந்தோஷம்போலவும், நெடுநாள் சிறைபட்டவனுக்குச் சிறைநீங்கின லவனுக்குவருஞ் சந்தோஷம்போலவும், கழித்தலைப்பட்டுக் கவழுங்

கப்பல் கரைசேர்ந்தவுடன் கப்பலாளிக்குவருஞ் சந்தோஷம்போலவும், உபாசித்ததேவதை பிரசன்னமானு லுபாசகனுக்குவருஞ் சந்தோஷம் போலவும், அளவிறந்தகாலம் பிறவிச்சமுத்திரத்திலழுந்தித் தொலையாததுக்கத்திற் கிடக்கிறவனுக்குச் சிவகடாட்சத்தினாலுங் குருகிருபையினாலும் சுருதிவாக்கிய சுவானுபவ சம்மதமாக இந்தஞானஞ்செனித்து நிரதிசயானந்த சமுத்திரத்தி லழுந்தியிருப்பதே சாட்சாத்கார ஞானியென்றும் விதேகமுத்தனென்றுமறிக.

வினா — தொம்பதவாச்சியந்தள்ளி இலட்சியமானசாட்சிஞானம் பிரகாசித்தாற்போதாதோ?

விடை — போதாது, அகண்டஞான சித்தியின்மையினாலுந் திருக்கைத்திரிசியமாய்க் காண்கையினாலும் தற்பதமுமறியவேண்டும்.

வினா — தற்பதவாச்சியந்தள்ளி இலட்சியமான பிரமஞானம் பிரகாசித்தாற் போதாதோ?

விடை — போதாது, பிரமத்திற்குச் சச்சிதானந்தலட்சணமிருக்கையாலும், இலட்சணத்தைத் தள்ளி லட்சியவஸ்துவை யறியவேண்டுமாதலாலு மசிபதமுமறியவேண்டும்.

வினா — அசிபதவாச்சியந் தள்ளி இலட்சியமான சர்வசாட்சி ஞானம் பிரகாசித்தாற்போதாதோ?

விடை — போதாது, சர்வமென்று சச்சிதானந்தபரிபூரணத்திற்குப்பேர், இதற்குச்சாட்சியாகையாலும் அறிகிறது மறியப்படுகிறதுமா யிருக்கையினாலும் அசிபதத்தையு மறியவேண்டும்.

வினா — அதிபதவாச்சியந்தள்ளி இலட்சியமான அதீத தாட்சிப் பிரகாசித்தாற்போதாதோ?

விடை — போதாது, இந்தவஸ்து சூன்யமாகையா லும், இது புத்தமதமான சூன்யவாதமாகுதலா லும் நிசயதமுமறியவேண்டும்.

வினா — நிசயதவாச்சியந்தள்ளி இலட்சியமான மோன மாய்ப்பிரகாசித்தாற் போதாதோ?

விடை — போதாது, மோனம்மவுட்டியமாகையாலும் மௌட்டியத்தில் வஸ்துநிலைமை யின்மையினு லும் மோனாதீதமேவஸ்துவென்று கல்யாணசம் பவ ரகசியயோதஞ் சொல்லுகையினாலும், மோ னாதீதவஸ்துவையே அறியவேண்டும்.

வினா — அஃதெப்படி?

விடை — மோனத்தையுமறிந்து அதை நீங்கினவன்தா னல்லவோ தானான ஞானசொரூபம், அதுசர்வத் துக்கும் விலட்சணமா யிருந்தாலு மிருக்கும், முற்சொல்லிய விருபத்தைந்துபடியொழுங்கோ டுகூடிச் சகலவியாபாரமுஞ் செய்தாலுஞ்செய் யும், எப்போதும் நினைத்தபோதும் இந்தவஸ்து வைத்தவிர மற்றவஸ்துக்களெல்லாந் தோற்றா மல் எப்போதும் விட்டுநீங்காத வஸ்துவாதலா லிதுவேதசம்மதியும் விலட்சணமாதலால் ஆகம சம்மதியுமாம். ஆனபடியால் இந்தநிலை வேதாக மசம்மதியென்றறிக.

## குருஸ்துதி - விருத்தம்.

அறிதருமவத்தைமூன்று மபிமானியானாய்போற்றி
செறிதருஞ்சடசித்தெங்குஞ் சிதாகாசமானாய்போற்றி

குறியொன்றுமின்றிநின்ற குணப்பெருங்கடலேபோற்
அறிவருந்திவானந்த வருட்டிருப்பாதம்போற்றி. [ம]

## ஒருமொழிப்பேதம்.

வினா— ஒருமொழிப்பேதமாவதென்ன?

விடை— வைதீகம், சைவம், சாக்தேயம், வைணவம், சாங்கியமென வைந்துபேதமாயிருக்கும். அவற்றுள் வைதிகத்துக்குத் தத்தொமசி யென்னும் வாக்கியமும், சைவத்திற்குப் பிரகிருதிபுருஷபரமாத்மாவென்னும்வாக்கியமும், சாக்தேயத்திற்கு அபின்னமின்ன அவித்தையாத்திரயமென்னும் வாக்கியமும், வைணவத்திற்குச் சாதாரணசமானசமூகமென்னும் வாக்கியமும், சாங்கியத்திற்குப் பிரகிருதி புருஷவிவேகமென்னும் வாக்கியமுமாய்சமயமைந்திற்கும் ஐந்துவாக்கியமாம்.

வினா— வைதீகத்திற்குச்சொன்ன தத்தொமசி வாக்கியத்திற்குப் பொருளென்ன?

விடை— வேதாகமங்களுக் கதிதமாய்விளங்கும் அது வென்னும்பிரமமே நீயானுமென்றது.

வினா— சைவத்திற்குச்சொன்ன பிரகிருதிபுருஷ பரமாத்மாவென்னும்வாக்கியத்திற்குப்பொருளேது?

விடை— அதில் ஆணவம்-மாயை-கன்மமெனப்-பிரகிருதி-மூன்றுவிதம், சகலர்-பிரளயாகலர்-விஞ்ஞானகலரெனப் புருஷனில்மூன்றுவிதமும், சகளம்-நிஷ்களம்-சகளநிஷ்களமெனப் - பரமாத்மாவில் மூன்றுவிதமாயிருக்கும்.

விஞ — பிரகிருதித்திரயமும் நஷ்டமாய்ப் புருஷத்திரயமுநீங்கிப் பரமாத்மாமாத்திரஞ்சித்திக்கும் வகையெப்படி?

விடை — சகலனுகிறபுருஷன் சகளமான இருபத்தைந்தமூர்த்தியாகிய மகேஸ்வரனென்னும் பரமாத்மாவையுபாசிக்க ஆத்துமதத்துவமிருபத்துநான்காயிருக்கிற கன்மமாகிய பிரகிருதிவிடப்பட்டுப் புருஷனுக்குச் சகலனென்பதுபோய்ப் பிரளயாகலனென்னும் பெயர்வரும். பிரளயாகலனுகிற புருஷன் சகளநிஷ்களமான பஞ்சசாதாக்கியமாகிய சதாசிவனென்னும் பரமாத்மாவையுபாசிக்க, வித்தியாதத்துவ மேழாயிருக்கிற மாயையாகிய பிரகிருதி விடப்பட்டுப் புருஷனுக்கும் பிரளயாகலனென்பதுபோய் விஞ்ஞானகலனென்னும்பெயர்வரும். விஞ்ஞானகலனுகிற புருஷன் நிஷ்களமான அகண்டபரிபூரணமாகிய சச்சிதானந்தசிவனென்னும் பரமாத்மாவையுபாசிக்கச் சிவதத்துவமைந்தாயிருக்கிற ஆணவமலமாகிய பிரகிருதிவிடப்பட்டுப் புருஷனுக்கு விஞ்ஞானகலனென்பதும்போய்ப் பரமாத்மாவாவன். அப்போதுபிரகிருதியாகின்ற மும்மலமும் விடுபட்டுப் புருஷனென்கிற நாமத்திரயமும்போய்ப் பரமாத்மாவேதானென்பது சித்திக்கும்.

விஞ — சாக்தேயத்திற்குச்சொன்ன அபின்னபின்ன அவித்தையாத் திரிவிதமென்னும் வாக்கியத்திற்குப் பொருளேது?

விடை — இதில், சத்து-சித்து-ஆனந்தமென அபின்னசத்தியில் மூன்றுசத்தியும், விராட்டு-இரணியக

ருப்பம்-விட்சேபமெனப் பின்னசத்தியில் மூன்றுசத்தியும், தமம் - விகிர்தம் - ஆவரணமெனஅவித்தையாசத்தியில் மூன்றுசத்தியுமாம்.

வினா— இதுகளுக்குலயமெப்படி?

விடை— விராட்டுதானால் தமோசத்தியும், இரணியகர்ப்பந்தானால் விகிர்தசத்தியும், விட்சேபந்தானா லாவரணசத்தியும், காரணமான பின்னசத்தியாகிய மாயைதானாற் காரணவித்தையாசத்தியும், சத்தேதானால் விராட்டும், சித்தேதானா லிரணியகர்ப்பமும், ஆனந்தமேதானால் விட்சேபமும், அபின்னசத்தியேதானாற் பின்னசத்தியுமில்லை.

வினா— இப்போதுசொன்ன நான்குசத்தியும் அவாந்தரவாக்கியசத்திகளாம். இனி மகாவாக்கியசத்திகளாகிய நான்குசத்திகளுக்கும் லயமெப்படி?

விடை— சித்தேதானாற் சத்ரூபசத்தியும், ஆனந்தந்தானாற் சித்ரூபசத்தியும், அபின்னசத்தியேதானாலானந்தரூபசத்தியும், சுபாவமேதானால் பின்னசத்தியுமில்லையென்றறிக.

வினா— லயவத்திற்குச்சொன்ன சாதாரணசமானசமுகமென்னும்வாக்கியத்திற்குப் பொருளென்ன?

விடை— மூர்த்தம், மூர்த்தாமூர்த்தம், அமூர்த்தமெனச் சாதாரணத்தில் மூன்றுவிதமும், மூர்த்தி, மூர்த்தாமூர்த்தி, அமூர்த்தியெனச் சமானத்தில் மூன்றுவிதமுஞ், சமானம், தாதாமியம், அயிக்கியமெனச் சமுகத்தில் மூன்றுவிதமுமாம்.

வினா— மூர்த்தி சாதாரணத்தில் மூர்த்திசமானமாய் ஐக்கியசமுகமாகாதோ?

விடை— ஒருவியாபகத்தி லொருவியாபகங் கூடாதபடியினாலும், அதிலின்பமில்லாத படியினாலும்,

செய்தநன்றி மறக்கையாலும், காட்டியற்றபடியி னாலும், பிரத்தியட்சமாகாதபடியினாலுங்கூடாது.

வினா— மூர்த்தாமூர்த்தி சாதாரணத்தில் மூர்த்தா மூர்த்தசமானமாய் தாதாத்மியசமூகமாகாதோ?

விடை— உருவாவுருவங் கூடாதபடியினாலும், ஏகலட் சணமான சமானமாகையினாலும், அனிர்வசனீ யமானபடியினாலும், ஏகலட்சணனந்த மின் மையினாலும், சமானலட்சண தாதாத்மியங்கூ டாமையினாலுங் கூடாது.

வினா— அமூர்த்திசாதாரணத்தில் அமூர்த்தியசமான மாய் சமானசமூகங்கூடுவதெப்படி?

விடை— குளவி புழுவை தன்னிறமாக்குவதுபோல் உருவம் ஏகலட்சணமாகையினாலும், கருவிகர ணங்களாறக்கண்டமகிழ்ச்சியானந்த முண்டாகை யினாலும், பேதத்திறக்கண்டமூர்த்திமே மூர்த்தி யில் மாறுபடாதபடியினாலும், நிசபத்திகைவல்ய மாகையினாலும், ஆனந்த கல்யாணகுண விளை யாட்டினாலும், சமானத்வமுத்தியே நிச்சயமென் றறிக.

வினா— சாங்கியத்திற்குச்சொன்ன பிரகிருதிபுருஷவி வேகமென்னும் வாக்கியத்திற்குப் பொருளெ ன்ன?

விடை— பிரகிருதிதத்துவம் பூதம் (ரு) ஞானேந்திரி யம் (ரு) கன்மேந்திரியம் (ரு) பிராணதிவாய்வு (ரு) கரணம் (ச) என இருபத்துநான்காம். இ வற்றில் தானபிமான தாதாத்மியமானவன் பு ருஷன்.

வினா— தாதாத்மியமாவதெப்படி?

விடை— நான் தனவான், பூமான், புத்திரகளத்திர வான், நான்பருத்தேன், இளைத்தேன், கண்டேன்,

கேட்டேன், புசித்தேன், கொடுத்தேன், போனேன், எனக்குப்பசிக்கின்றது, தாகிக்கின்றது, நான் சங்கற்பித்தேன், நிச்சயித்தேன், அகங்கரித்தேனென்பதே, தாதாத்மியம்.

விஞ—விவேகமாவதெது?

விடை—என்தனம், என்பூமி, என்புத்திரகளத்திரயம், என்சரீரம், என்கண், என்காது, என்கால், என்கை, என்பிராணன், என்மனம், என்புத்தியென்னும் விவேகத்தாற் பிரகிருதியும், புருஷனும், வேறென்றறிந்து, புருஷனை சைதன்யந் தானனதே விவேகஞானமென்றறிக. இவ்வைந்திலுள் வைதிகமே சுபாவநிலை. அஃதேமோட்சம்.

விஞ—சைவத்தை இங்ஙனஞ்சொல்லுவானேன்?

விடை—இந்நிலைவரும்பொருட் டுபாசிக்குந் தேவதையைச்சொன்னது.

விஞ—சாக்தேயத்தைச் சொல்லுவானேன்?

விடை—ஒரு வுபாதியுமற்ற தனக் குபாதிவரலாலுரைத்தது.

விஞ—வைணவத்தைச்சொல்லுவானேன்?

விடை—முடிந்தநிலையன்றிக் கீழ்ச்சொன்ன வுபாதிபேததேவதையை யுபாசித்தால் தானுமந்தமயமாவனென்றுசொன்னது.

விஞ—சாங்கியத்தைச் சொல்லுவானேன்?

விடை—உபாதிதத்துவத்திற் கட்டுப்பட்டு ஆகாமியமேவிச் ஜென்மம் வராமல் நீங்கிநிற்ற லென்றறிக.

## குருஸ்துதி.

விமலனேயுன்னுள் வேறற்றகாட்சியே
நிமலனேநித்தி யானந்தரூபனே
கமலநேயக் கதிரவன்போலுளத்
தமலனேயறி வானந்தரூபனே.

## சர்வாகருஷணவாக்கியசம்பிரதாயம்.

ஓய் ரிஷிகளே-விவேகம்-சாங்கியம் - யோகமென மூவகை இம்மூவகைக்கும்-பக்குவ அதிகாரிகள் மூவருண்டு.

வினா— அவர்களார்!

விடை— சமரசன்-சாங்குசித்தன்-சர்வத்தியாகி - என மூவராம்.

வினா— இம்மூவருக்கும்-பூர்வகன்மபலமெது!

விடை— ஈஸ்வரனை நெடுநாளுபாசித்து அவர்கிருபை யெற்ற பரிபக்குவனுக்குச் சமரசனென்றும், வஸ்துவை யதார்த்தமாயறிந்த மகத்துக்களையுபாசித்து அவர்கிருபையைபெற்றபரிபக்குவனுக்குச் சாங்குசித்தனென்றும், ஞானசொரூபமாய் விளங்குகிற சற்குருவுக்குச் சிசுருஷைசெய்து அவர்கிருபை பெற்ற பரிபக்குவனுக்குச் சர்வத்தியாகியென்றும்பெயர்.

வினா— இம்மூவருக்கு மிலட்சணமெது!

விடை— சமரசன், தேகாதிப்பிரபஞ்சத்தி லாசையற்று ஈஸ்வரபத்தியாய் சற்கிருத்தியஞ் செய்துகொண்டிருப்பான். சாங்குசித்தன், தேகாதிப்பிரபஞ்சத்தி லாசையற்றுச் சற்கிருத்தியமும்விட்டு மோட்சதாகியாயிருப்பன். சர்வத்தியாகி தேகாதிப்பிரபஞ்சத்தி லாசையற்றுபசாந்தனாகி யிருவ

கைக்கிருத்தியத்திலு முபாதிபடைந்துநித்திரை மயக்கமுடையவன்போ லிருப்பன்.

வினா— ஆனலிம் மூன்றுபக்குவர்களுக்கு மெதையுப தேசிப்பது?

விடை— சமரசனுக்கு நீயதுவென்றவாக்கியத்தை யுபதேசித்து சமரசஞானநூலையுங்கொடுத்து அவனை அதன்வழியே நிறுத்தவேண்டும். மேலும் தனது சரீரத்திரயம் சீவன், சீவசாட்சியாகிய இவற்றை ஈஸ்வரசரீரத்திரயம். ஈஸ்வரன், ஈஸ்வர சாட்சியாக்கி அவனைப்போலவருக்குச் சமமான படியா லவனுக்குச்சமரசனென்னும்பெயர்.

சாங்குசித்தனுக்கு நா னீ அதுவென்ற வாக்கியத்தை யுபதேசித்துச் சாங்கியநூலையுங்கொடுத்து அவனை அதன்வழியேநிறுத்தவேண்டும். மேலும் சாங்கியத்திற் சித்திக்கப்பட்ட சித்துதானுகையாலவனுக்குச் சாங்குசித்தனென்றுபெயர்.

சர்வத்தியாகிக்கு அது நீயானுயென்ற வாக்கியத்தையுபதேசித்து யோகநூலைக்கொடுத்து அவனை அந்த வழியே நிறுத்தவேண்டும். மேலும் தேகமுதற்சூபாவ வரையில் பதினறுந்தியாகம்பண்ணி அவைக்கதீதமான பொருளாதலா லவனுக்குச் சர்வத்தியாகி யென்று பெயர்.

வினா— ஆனலிந்தநாமங்கள் சாத்தியத்திலல்லவோ வரவேண்டும் சாதனத்தில்வருவானேன்?

விடை— காரியசித்தியில் வருகிறநாமங் காரணத்திலும்வரும்.

வினா— அஃதெங்ஙனம்?

விடை— சர்வத்தையுந் தகித்துப் பிற்பாடு சுகத்தை யடையப்போகிற சுகருக்குச் செனித்தபோதே சுகனென்றும், யாகத்தி லக்கினிகாரியமான கங்கைக்கு அவ்வியாகத்திற்கு முன்பே அக்கினிஎன்

றும், சிட்டாசாரமான சற்கருமம் பிறகுசெய்யப் போகிற வசிட்டருக்கு உற்பத்தியில் தானே வசிட்டரென்றும் பேர்வந்ததுபோலவரும்.

வினா — அந்தந்தப் பக்குவர்களுக்கேற்ற வுபதேசமுஞ் சாத்திரமுமல்லாமல் மாறுபாடான வுபதேசம் பெற்றுச் சாஸ்திரமும்பார்க்கி லனுபவசித்தியாகாதோ!

விடை — சித்திக்காது, ஆயின் விபரீதபாவனை போமன்றி அசம்பாவனைபோகாது, விபரீதபாவனை குருசாஸ்திரங்களால் தீரும், அசம்பாவனைவரில் குருசாஸ்திரங்களினலுந்தீராது, விபரீதபாவனையுடையவனை அனாத்மத்துரோகியென்றும், அனுபவத்திற் சந்தேகம்பிறந்து நிற்குநிலைகொள்ளாமல் தவறுகையினல் ஆத்மத் துரோகியென்றும், பிரமத்துரோகியென்றும், இந்தத்துரோக நீங்குதற்கிதற்குமேலனுபவமுஞ் சாஸ்திரமுமின்மையாலொன்றினலும் போகாதென்றும் நான்குயசிட்டத்துங்களிற் சொல்லுகின்றது.

வினா — அஃதெப்படி?

விடை — சத்யஞ் சத்யம் புனற்சத்யம் — சம்சயானுபவங்கதீ — நாஸ்தி என்றும், அதோ அதோ சம்சயேகதி-தேவநீத் துருநாஸ்தி என்றும், சம்சயோகதி — ரௌரவோகும்பீ — ரௌரவோகும்பீ என்றும், இகபரம் நாஸ்தி-பரம் — நாஸ்தி-நாஸ்தி பலோற்பம் — வாக்கியோ சம்சயம் கவித்யதே-என்றுஞ் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆதலாலிதர சாஸ்திரங்கள் பார்க்கலாகாது. பார்க்கவேண்டுமாயின் தனது சுவானுபவநிலைவிடாமற் சாவதானமாய்ப் பூர்வபட்சமாகப்பார்த்துத் தள்ளவேண்டும்.

வினா — ஞானம்பெற்றஇம்மூவருக்குங்கிருத்தியமெப்படி?

விடை — சமாசகன் சற்கிருத்தியம் வழுவாமற் செய்ய வேண்டும். சாங்குசித்தன் சர்வவிடயசகிதனாயி ருக்கின்றார் தாழ்வில்லை. சர்வத்தியாகி இவ்விருவ கைக் கிருத்தியமும்விட்டுச் சுழுத்தியன்போலி ருப்பன். ஆயினும் இம்மூவருக்கும் முத்தி சரி யென்றறிக.

## பிரமாநுபவம்.

வினா — யாஞ்ஞவர்க்கர் மயித்திரிக்கனுக்கிரகஞ்செய்த பிரமாநுபவமெப்படி?

விடை — பிரமம் - சீவன் - அவித்தை - அந்தக்கரணம் - இந்திரியம - விஷயம் ஆறு (௬) இவைக்கனுபவ மேதென்றால், ஒருபாதியுமின்றித் தானேதானாய்ப் பிரகாசிப்பது பிரமம், அந்தப்பிரமம் அவித்தை யிற் பிரதிபலித்தபோது சீவனாம், அந்தச்சீவன் அவித்தையிற்கூடிற் சுழுத்தியும், அந்தக்கரணத் திற்கூடிற் சொப்பனமும், இந்திரியத்திற்கூடிற் றேகமாத்திரஞானமும், விஷயத்திற்கூடிற்சாக் கிராவத்தையுமாம்.

வினா — இச்சாக்கிராவத்தையில் விவகரிக்கும்போது அவ்வாறு தத்துவத்திற்கும் வகையெப்படி?

விடை — பார்க்கப்பட்டது விஷயம், பார்த்தது இந்திரியம்.

வினா — இந்திரியம் பார்க்குமோ?

விடை — பார்க்கமாட்டாது.

வினா — பார்த்ததெது?

விடை — அந்தக்கரணம், அவித்தை, சீவன்.

வினா — அஃதெப்படி?

விடை — இந்திரியத்துவாரத்தா லந்தக்கரணவிருத்தி பிரவர்த்தித்து விஷயாஞ் ஞானத்தைப்போக்கி விஷயாகாரமாய் அவ்விஷயத்தைத்தோற்றுவித்து, அவ்விருத்தியைப் பாவித்தது அவித்தைவிஷயத்தைப் பகுத்தறிந்தது சீவன், இவையெல்லாம் விளக்கமாயறிந்தது பிரமம். அந்தப்பிரமம் ஒன்றிற்கும் விஷயமல்லவென்றறிக.

வினா — பிரமம் ஒன்றினாலுமறியப்படாதெனறால் முயற்கொம்பும் அறியப்படாதென்றாற் கடபடாதிகளைப்போற் சடத்துவமுமாமே?

விடை — விஷயம் பிரபஞ்சவிஷயமென்றும் பிரமவிஷயமென்று மிரண்டுவகையாயிருக்கும், அவற்றுள் பிரபஞ்சவிஷயத்தைப் பார்க்கும்போது இந்திரியமும், அந்தக்கரணமும், சீவனும்வேண்டும்.

வினா — அதுகளெப்படிபார்க்கும்?

விடை — விஷயத்தை இந்திரியம்பார்க்கும், அந்தக்கரணந் தோற்றுவிக்கும், சீவனறியும், இம்மூன்றுலட்சணமும் பிரமத்திலிருக்கையா லிதுகளைக்கொண்டு பிரமத்தையறியப்படாது.

வினா — அஃதெப்படி?

விடை — சர்வசாட்சியா யெல்லாவற்றையுந்தான்பார்க்கிறபடியினால் அதையறிய இந்திரியமும், சுயம்பிரகாசமா யெல்லாவற்றையுந் தோற்றுவிக்கிறபடியினா லந்தக்கரணமும், அறிவேவடிவா யெல்லாவற்றையுந் தானறிகிற படியினாற் சீவனும் வேண்டுவதில்லை ஆகையால் சர்வமுமறிந்து

சர்வ சாட்சி அதை ஒன்றினாலு மறியப் படாது.

வினா= அந்தச்சாட்சியை யறியும்விதமெப்படி?

விடை= சாட்சிஞானங்கொண்டே சாட்சியையறிய வேண்டும்.

வினா= விஷயேந்திரிய கரணவித்தைகளைச் சீவனே யறியுமென்று சாஸ்திரத்திலு மனுபவத்திலுமிருக்க நீர் பிரமமறியுமென்பதும் இச்சீவனையே பிரமமென்பதுங் கூடாது. ஒருடலிலிரண்டுசித்திருந்து அறியும்வகை யெங்களுக்குச் சொல்ல வேண்டும்?

விடை= ஒருடலி லிரண்டு சித்திருப்பதற்குச் சுருதி யுத்தி யனுபவம் இரண்டிரண்டாகும்.

வினா= சுருதி யிரண்டாவதெப்படி?

விடை= ஒருவிருட்சத்தி லிரண்டுபட்சிகளுண்டு அதில் ஒருபட்சி ஒருகிளையிலிருந்து அசையாமற் பார்த்திருக்கும் ஒருபட்சி கிளைகடோறுந்தத்தித் திரிந்து பழங்களைப்புசிக்கும் அதுபோலச்சாட்சி சைதன்யம் சரீரத்தில் நிர்விகாரமாயிருக்கும், சீவசைதன்யம் விகாரியாய் விஷயத்தைப்புசிக்குமென்றொரு சுருதியிலும் நாடகசாலை, தீபம், பிரபு, கூத்தாடிச்சி, தாளமத்தளக்காரர், சுற்றிலும்பார்க்கிற பரிவாரங்களைப் பிரகாசிப்பிக்கும் அதுபோல்பிரகாசசாட்சி, சீவன், அந்தக்கரணம், ஞானேந்திரியம், கன்மேந்திரியம், விஷயமாகிய இதுகளைப் பிரகாசிப்பிக்கும் ஆதலால் சாட்சி சீவன் உண்டென்றொரு சுருதியிலுஞ்சொல்லப் படுகின்றது.

வினா = யுத்தி யிரண்டாவதெப்படி?

விடை = ஒருகனியைக் கண்ணானது இச்சையற்றறியும், நாவானது அறிந்து இச்சிக்கும், அதுபோல ஒருவிடயத்தைச் சாட்சியானது இச்சையற்றறியும், சீவன் அறிந்து இச்சிக்குமென்பது ஒருவிதயுத்தியும், கண்ணானது நீலோற்பலரூபத்தையறியும், ஆக்கிராணமானது, அரூபமான மணத்தையறியும், அதுபோலப் பிரபஞ்சரூபத்தைச்சீவனறியும், அரூபமான அஸ்தியாதிபிரியத்தைச் சாட்சியறியுமென்பது ஒருவிதயுத்தியுமாம்.

வினா = இருவகையனுபவமெப்படி?

விடை = என்சரீரம், என்கால், என்கை, என்கண், என்மனம், என் அஞ்ஞானம், என்றவன் சீவன். என்சீவன்போயிற்று, என்சீவன் வந்ததென்றது சாட்சியென்பது ஒருவிதவனுபவமும், ஆரங்கேஎன்றால் நான்தானென்பதனால் நான் என்றது சீவனும், தான் என்றது சாட்சியுமென்பது ஒருவிதவனுபவமுமாம்.

வினா = நான்தானென்றது, சீவனன்றிச் சாட்சியென்று சொல்லக்கூடாதே?

விடை = நானொரு குற்றஞ்செய்தால் தானேபொறுக்கவேண்டாவோ, நானுந்தானுமிருக்கிற வொருமைக்கிப்படி வரலாமோ என்பதனாலும், நானென்றது தன்னையும், தானென்றது, தனக்கன்னியமான புருஷனைப்போலும், நானென்றது சீவனும், தானென்றது தனக்கன்னியமான சாட்சியுமென்றறிக.

வினா = ஆரங்கேயென்னுமிடத்து, நானென்று விவகரிக்கிறவன் நானென்று சொல்லவேண்டுமன்றித்

தனக்கன்னியசாட்சியுங் கூட்டிக்கொண்டு நான்
தானென்று விவகரிக்கக்காரியமேது?

விடை — வீட்டுக்கன்னியமாய் நின்றபுருடனை வீட்டி
லாளென்று ஒருவன்கேட்கத் தூங்குகிறவனையுங்
கூட்டி விழித்திருப்பவன் நாங்கள்தானென்று
சொல்வதுபோல, விவகாரசீவனுஞ் சாட்சியைக்
கூட்டி யொன்றாய்ச்சொல்லுவதென்றறிக.

வினா — சாட்சியுஞ்சீவனு மிரண்டானால் உமது அத்
வைதசித்தாந்தங் கூடாதே?

விடை — ஆதித்தப்பிரகாசத்தில் தீபப்பிரகாசமடங்கி
னதுபோலகண்ட சுயம்பிரகாசத்திற் சீவப்பிர
காசமடங்கி அகண்டந்தானாயிருக்கும்.

வினா — அகண்டபரிபூரணமேதானால் கயிலாயம்வை
குந்தத்தி லகண்டவறிவெப்படியிருக்கும்?

விடை — கயிலாய வைகுந்தங்களில் விருத்தியுஞ் சீவ
னுமின்மையா லழியேனென்றாய், இவ்விடத்தில்
விருத்தியுஞ்சீவனு முண்மையா லழிந்தேனென்
றாய், அறிந்தேன் அறியேனென்றவன்சீவன், அவ்
விரண்டிற்குஞ் சாட்சியாயிருந்ததேபிரமம்.

வினா — ஆனால், அநிர்தசடதுக்கமான பிரபஞ்சமும்
சச்சிதானந்தமான பிரமமுமுண்டென்றால்பிரம
மொன்றேயென்ற வேதத்திற்கு விருத்தமாமே?

விடை — சத்தென்றால் அநிர்தமும், சித்தென்றால் சட
மும், ஆனந்தமென்றால் துக்கமுமில்லை.

வினா — சகலமுஞ் சச்சிதானந்தபிரமமாய்க் கண்டபே
ருக்கும் மற்றவேளையில் பிரபஞ்சந்தோற்றுகை

யால் இப்போது தோற்றின பிரபஞ்சத்தையே பிரமமென்றீரோ?

விடை — தான் நித்திரைசெய்யுமுன்பு விருத்திமாத்திரமாயிருந்தும் விருத்தியிற்கண்டசொப்பனமெல்லாம் விருத்தியைவிட வேறில்லாததுபோற்சமாதியில் அறிவுமாத்திரமாயிருந்தும் அவ்வறிவிற்றோன்றின தேகாதிப்பிரபஞ்சமுமறிவைத்தவிர வேறில்லை.

வினா — தாதாத்மியலட்சண அஞ்ஞானவவித்தையில் விவகாரங்கூடும், தாதாத்மிய ரகிதஞானத்திற் சரீரத்திரயமும் ஆபாசனும் லயமாய் ஒருசெயலுமற்றுத் தானேதானாய்ப் பிரகாசிக்கின்ற ஞானிக்கு விவகாரமெப்படி கூடும்?

விடை — குலாலன் அசைவற்றிருந்துந் திரிகைவிசையுள்ளவளவு மாடியோய்கிறதுபோல் தான் அசங்கனானாலும் பிராரத்தசரீர முள்ளவளவும் புசித்துத் தொலைத்துத் தன்னிலேநிற்கும்.

வினா — பிராரத்தம் பொசிக்கையில் ஆகாமியமேறி யிருவினையுங்கட்டுப்பட்டு ஜென்மம்வருமே?

விடை — பிரமசொரூபமே தானாயிருந்து பொசிக்கையினாலாகாமியமேறாது, முன்னர்தான் சொரூபமென்று சிந்தித்தபோதே சஞ்சிதநீங்கும், இப்போதிச்சிக்கின்ற சுகதுக்கமெல்லாம் பிரமத்திற்காகையாற் பிராரத்தமுமில்லை. ஆதலாலிம்மூன்றுமில்லாத பிரமசொரூபமே தானாயிருப்பது தீர்ந்தநிலையென்றறிக.

## தத்துவநிராகரணம்.

வினா — தத்துவநிராகரணமாவதெது?

விடை — தீபத்திற் சூடிருப்பதுபோற் சர்வசாட்சியி டத்திற் சிற்சத்தியிருக்கும், தீபத்திலும் கிரகத்திலும் பிரகாசித்திருக்கிற பிரகாசஞ் சகலருக்கும் சுகத்தின்பொருட்டும், தீபத்திலும் சகலத்திலும் பிரவேசித்திருக்கின்ற சூடு சகலருக்குந் துக்கத்தின்பொருட்டுமா யிருக்கும், அதுபோல சர்வசாட்சியான சுயஞ் சோதிதானயிருக்கினும் சர்வவியாபகமா யிருக்கினு மனந்தசுகமாயும்சிற சத்தி சாட்சியிடத்திருக்கினும் சீவேசுரசித்தாகா ரமாயிருக்கினு மனந்தது க்கரூபமாயு மிருக்கும்.

வினா — சிற்சத்தியனுபவமும் சகலமுந்தன்னிடத்துற் பத்தியும், அச்சிற்சத்திஞானத்தா லெந்தப்பொ ருளைத் தானைக்கண்டானே அந்தப்பொருளுக் குமேலான பொருள்தோற்றாமற்கண்டபொருள் தானயிருக்கிறது மெப்படி?

விடை — அகம் நான் எனதென்று வருகிறவனுபவமே சிற்சத்தி, அதிலுற்பத்தியும் அதிலபிமானித்த பொருளே தானகிறதுமெப்படியென்றால், அக மற்றது சர்வசாட்சி, சர்வசாட்சி யேதகமென்றால் அது தானய்விளங்குஞ் சர்வசாட்சியுஞ்சிற்சத்தி யுமுண்டாம் ஆ தத்துவம். (௨) பரப்பிரமமோ தகமென்றால் சர்வசாட்சிதோன்றுமற் பரப்பிர மந் தானயிருக்கும், அப்போது சர்வசாட்சி சிற சத்தி பரப்பிரமம். ஆ தத்துவம் (௩) ஆனந் தோகமென்றால், பிரமானந்தசொரூபந்தானவன் அப்போது ஆனந்தம் அவத்தை அபிமானியுடன்

ஆக தத்துவம் (௯) சின்மயாத்திரோகமென்றால் சித்தேதானாம், அப்போது முன்போலதத்துவம் (௯) சன்மாத்திரோகமென்றால் சத்தேதானாம், அப்போது முன்போலதத்துவம் (௧௨) பிரமோகமென்றால் பிரமமேதானாம், அப்போது தத்துவம் (௧௩) சர்வேஸ்வரோகமென்றால் ஈஸ்வரனே தானாவன், அப்போது தத்துவம் (௧௪) சர்வஞ்ஞோகமென்றால் அந்தரியாமிதானாவன், அப்போது முன்போலத்தத்துவம் (௧௭) சர்வவியாபியோகமென்றால் இரணியகர்ப்பந்தானாவன், அப்போது சமஷ்டி சூட்சுமபூதம் (௫) உடன்முன்போல தத்துவம் (௨௧) விஸ்வோகமென்றால் விராட்டே தானாவன், அப்போது வியஷ்டி சூட்சுமபூதம் (௫) உடன் முன்போலத்தத்துவம் (௩௧) சாட்சியோகமென்றால் சாட்சிதானாவன், அப்போது தத்துவம் (௩௨) போதோகமென்றால் சிவன் தானாவன், அப்போது தத்துவம் (௩௩) நானஞ்ஞானியென்றால் அஞ்ஞானம், அவத்தை, அபிமானியுடன் அப்போது தத்துவம் (௩௬) என் மனோவிருத்தியென்றால் சூட்சுமசரீரந்தானாவன், அப்போது முன்போல தத்துவம் (௫௮) என் சரீரமென்றால் தூலசரீரந்தானாவன், அப்போது முன்போல தத்துவம் (௬௬) ஆக அறுபத்தாறு தத்துவமும் மேற்கூறிய பதினைந்து பொருளுந் தானாவதினாலுற்பத்தியாமென்றறிக.

வினா — இனி விவேகம்பிறந்து இவற்றை நீங்கிநிற்கும் முத்திக்கிரமமெப்படி?

விடை — இவ்வறுபத்தாறு தத்துவமான தூலதேகத்தையே தேகோகமென்றும், அது தானாயிருந்தால் இகலோக முத்தியென்றும், அதுநீங்கிச் சூட்சுமதேகந்தானாய் என் மனோ விருத்தியென்றால் ஐம்

பத்தெட்டுத்தத்துவந் தானாவன். அப்போது பா
வோகமுத்தனென்றும், அதுநீங்கிக் காரணதே
கந்தானாய் நான் அஞ்ஞானியென்றால் முப்பத்
தாறு தத்துவந் தானாய் யோகமுத்தனென்றும்,
யோகோகமென்றால் அது நீங்கி முப்பத்துமூன்
று தத்துவமாகிய சீவன் தத்துவன்தானாய் முத்
தனென்றும். சாட்சியோகமென்றால் அது நீங்கி
முப்பத்திரண்டு தத்துவமான சாட்சி தானாய் சீ
வன்முத்தனென்றும், விஸ்வோகமென்றால் அது
நீங்கி முப்பத்தொரு தத்துவமான விராட்டு தா
னாய் விஸ்வரூப முத்தனென்றும், சர்வவியாபி
யோகமெனால் அது நீங்கி இருபத்துநான்கு தத்
துவமான இரணியகர்ப்பந்தானாய் வியாபகமுத்
தனென்றும், சர்வஞ்ஞோகமென்றால் அது நீங்
கிப்பதினேழு தத்துவமான அந்தரியாமி தானாய்
சர்வஞ்ஞ முத்தனென்றும், சர்வேஸ்வரோக
மென்றால் அதுநீங்கிப் பதினான்குதத்துவமான
ஈஸ்வரனே தானாய்க்கர்த்திருத்வமுத்தனென்றும்,
பிரமோகமென்றால் அதுநீங்கிப்பதின்மூன்றுதத்
துவமான பிரமமே தானாய் பிரமமுத்தனென்
றும், சன்மாத்திரோகமென்றால் அது நீங்கிப் ப
ன்னிரண்டு தத்துவமான சத்தே தானாய் பாவ
முத்தனென்றும், சின்மாத்திரோகமென்றால் அது
நீங்கிஒன்பது தத்துவமான சித்தே தானாய் ஞா
னமுத்தனென்றும், ஆனந்தோகமென்றால் அது
நீங்கி ஆறுதத்துவமான பிரமானந்தந் தானாய் ப
ரமானந்த முத்தனென்றும், பரப்பிரமோகமென்
றால் அது நீங்கி மூன்றுதத்துவமான பரப்பிர
மந் தானாய் பரமுத்தனென்றும், சர்வசாட்சி

யோகமென்றால் அது நீங்கி இரண்டு தத்துவ மான சர்வசாட்சி தானும் விவேகமுத்தனென் றும் பெயர். சர்வசாட்சி ஞான நீங்கினால் சிற்சத் தியுநீங்கும். அஃது நீங்கவே ஏகத்வமான மோ னதீத சொரூபந் தானும் அபாவ முத்தனென்று சொல்லப்படும்.

## ஞானத்திரயத்திரிபுடி.

வினா — மேற்கூறிய ஞானத்திரயங்களில் பகிர்மூக மான திரிபுடிவிளங்குவதெப்படி?

விடை — சீவசாட்சிஞானம், பகிர்முகமானபோது-வி டயம் விருத்தி-சீவன் (௩) அந்தர்முகமானபோது, நிராகாரம்-நிர்விடயம்-நிர்மலம் (௩) ஈஸ்வர சா ட்சிஞானம், பகிர்முகமானபோது, இச்சை-ஞா னம்-கிரியை (௩) அந்தர்முகமானபோது, சத்து- சித்து-ஆனந்தம் (௩). சர்வசாட்சிஞானம், பகிர் முகமானபோது, சுத்தம்-சூன்யம்-சுபாவம் (௩) இம்மூன்று லட்சணமு நீங்கிச் சர்வசாட்சிஞான மடங்கின நிலையில் யதார்த்தசொரூபமாகிய தா னேதானான மோனதீதமாய்ப் பிரகாசிக்கும். இ துவே முடிந்தநிலை.

## வாக்கியசிந்தனை-தத்துவதரிசனம்.

வினா — வாக்கியசிந்தனையநுக்கிரகிக்குமுறைமை யெப்படி?

விடை — வாக்கியப்படி யொழுங்கிருபத்தைந்துந் த ரிசிக்கிறதற்குச் சமயவாதிகளும் சாஸ்திரவாதி

களு மொவ்வொன்றை யனந்தபேதமாகச் சொல்
லுவார்கள். அது இன்னவகையி னு லின்னதுகூ
டாது, இன்னதுகூடுமென் றறியவேண்டும்.

வி௫ == தூலசரீரதரிசனமென்பது அவயவத்தையோ,
உடற்கூற்றையோ, பூதகாரியத்தையோ, விடயத்
தையோ, தேகத்தையோ?

விடை == தன்னவயவம், தனக்குப் பிரத்தியட்ச மாகா
மையினாலும் உடற்கூறு, பஞ்சபூதவடிவாகையா
லும் பூதகாரியமெல்லாம், தூலசரீரமாகாதா
கையினாலும் விடயம், பஞ்சபூதகுண மாகையா
லுங் கூடாது. தேகோகம், பிரமோகத்திருக்கை
யாற் கூடும்.

வி௫ == சூட்சும சரீர தரிசனமென்பது விடயரூப வி
ருத்தியோ தமோகுணமோ விருத்திஞானமோ
நாற்கரணத்தையுந் தரிசிப்பதோ சஞ்சலவிருத்
தியோ?

விடை == விடயரூபவிருத்தி, போகமாகையினாலும்
தமோகுணம், அந்தகார மவுட்டிய மாகையினா
லும் விருத்திஞானம், விருத்தியிற் சம்பந்தித்
தசாட்சி ஞானமாகையினாலும் நாற்கரணத்தை
யுந்தரிசித்தல், மனோவாங்காரமொன்றாய் அஞ்
ஞானமூல மாகையாலும் மனத்தையே தரிசிக்
கையாலுங் கூடாது. சஞ்சலவிருத்தி, விஷய பு
றமுகமற்று அந்தர்முக சித்தசஞ்சலமாகை
யாற் கூடும்.

வி௫ == காரணசரீர தரிசனமென்பது தமாந்தகாரமோ
பூதாந்தகாரமோ மவுட்டியாந்தகாரமோ மோகாந்
தகாரமோ விஷயலயாந்தகாரமோ சுழுத்தியா
னந்தகாரமோ அவித்தையாந்தகாரமோ:

விடை — தமாந்தகாரம், மக்கினதமசாகையினலும்; பூதாந்தகாரம், பூதமென்றப்பாகையாலும் மவுட்டியாந்தகாரம், மவுட்டியமாகையாலும் மோகாந்தகாரம், மயக்கமாகையாலும் விஷயலயாந்தகாரம், விஷயலயவாசனை யிருக்கையாலும் சுழுத்தியாந்தகாரம், அந்தகாரவனுபவ மில்லாதாகையினலுங் கூடாது. அவித்தையாந்தகாரம் தற்சொரூபமும் விஷயமுந்தோற்றுமலந்தகாரமே தானனவனுபவமிருக்கையாற் கூடும்.

வினு — சிவதரிசனமென்பது - போதமோ-அறிவோ-பிராணனே - ஞானமோ?

விடை — போதம், விஷயவுன்முக மாகையாலும்-அறிவு விஷய வேதுவாய் ஜெனிக்கையாலும்-பிராணன், சீவனுக்காதார மூலமாகையாலும் கூடாது. ஞானம், அந்தர்முக ஜீவசொரூப மாகையாற் கூடும்.

வினு — சாட்சிதரிசனமென்பது பகிர்முகத்திரிபுடி ஞானமோ அந்தர்முகத்திரிபுடி ஞானமோ சத்ரூபமோ ஆனந்தரூபமோ பரிபூரணமோ சுத்தஞான சொரூபமோ?

விடை — பகிர்முகத்திரிபுடிஞானம், சமாதியில் விஷயமின்றாகையாலும் அந்தர்முகத்திரிபுடிஞானம், தனக்குள்ள லட்சணமறிகையாலும் சத்ரூபம், உண்டென்னு மிலக்கணமாதலாலும் சித்ரூபம், பிரகாசவிலக்கணமாதலாலும், ஆனந்தரூபம், சுகசொரூபவிலக்கணமாதலாலும் பரிபூரணம், பிரமவிலக்கணமாதலாலுங் கூடாது, சுத்தஞான சொரூபம், சாட்சிநிஜசொரூப மாதலாற்கூடும்.

வினு — விராட்டு தரிசனமென்பது தத்துவசமஷ்டியோ பஞ்சபூத வடுக்கோ நாமரூபாத்மகமோ ப

ஞ்சசாதாக்கியமோ, அஷ்டமூர்த்தி சொரூப
மோ விசுவசொரூபந் தானாயிருப்பதோ?

விடை— தத்துவ சமஷ்டி தூலசரீரங் கூடுகையா
லும் பஞ்சபூதவடுக்கு, மின்னுமின்னமா யிருக்
கையாலும் நாமரூபாத்மகம், பூதகாரிய . மாகை
யாலும் பஞ்ச சாதாக்கியம், தத்துவமூர்த்தி வ
டிவமாகையினாலும் அஷ்டமூர்த்திசொரூபம்,
ஈஸ்வர சகளமூர்த்தி சொரூபமாதலாலுங் கூ
டாது. விஸ்வரூபந் தானாயிருத்தல், விஸ்வமே
விராட்டுரூபமாகையாற் கூடும்.

வினா— இரணியகர்ப்ப தரிசனமென்பது விஸ்வவியா
பக விருத்தியோ, அகண்டாகார விருத்தியோ,
விஸ்வரூபமயவிருத்தியோ?

விடை— விஸ்வ வியாபக விருத்தி விஸ்வமாத்திரம் வி
யாபிக்கையாலும், அகண்டாகார விருத்தி விஸ்
வத்தைவிட விருத்திவியாபிக்கையாலும் கூடா
து. விஸ்வரூப மயவிருத்தி விஸ்வரூபமாகையி
னாலும் கூடும்.

வினா—மாயாதரிசனமென்பது மாயாகாரியமோ, மித்
தையாகாரமோ, அசத்தாகாரமோ, மாயாகார
ணமோ?

விடை—மாயாகாரியம் விஸ்வரூபமாகையாலும், மித்
தையாகாரம் ஏதுமில்லாத தோற்றரவாகையா
லும், அசத்தாகாரம் சித்தஅபாவமாகையாலுங்
கூடாது. மாயாகாரணம் தன்மயமாதலாற் கூ
டும்.

வினா— ஈஸ்வர தரிசனமென்பது, இச்சாவடிவோ, சர்
வஞ்ஞத்வமோ, நிர்மலபோதமோ, நிர்மலவடி
வோ, நிர்மலஞானமோ?

விடை— இச்சாவடிவு இச்சாசத்தி வடிவமாதலாலும்,
சர்வஞ்ஞத்வம் மாயாசத்தி கூடியிருக்கையா

லும், நிர்மலபோதம் அகங்காரசொரூப மாதலாலும், நிர்மலவஸ்து பகிர்முகமாகையாலுங் கூடாது. நிர்மலஞானம் சிவஞான மாகையாற் கூடும்.

வினா— பிரமதரிசன மென்பது அந்தர்முகத் திரிபுடி ஞானமோ, பகிர்முகத்திரிபுடி ஞானமோ, அகண்டசத்ரூபமோ, நிரதிசயானந்தமோ, அகண்டவியாபகமோ, நிர்மலபூரணமோ, அகண்டசித்ரூப ஞானமோ?

விடை— அந்தர்முகத் திரிபடிஞானம், லட்சணதரிசனமாகையாலும், பகிர்முகத்திரிபுடி ஞானம், தெரிந்து தோற்றுகையாலும், அகண்டசத்ரூபம், ஞானவீனமாகையாலும், நிரதிசயானந்தம், ஆனந்த தரிசனமாகையாலும், அகண்டவியாபகம், பிரபஞ்சமிருக்கையினாலும், நிர்மல பூரணம், மாயையிருக்கையினாலும், கூடாது. அகண்டசித்ரூபஞானம் நிசமாகையாற் கூடும்.

வினா— சத்துதரிசனமென்பது, சத்தைசொரூபமோ, குணிரூபமோ, ஏகதேசசத்தோ, சத்தையாஞானமோ, பாவலட்சணமோ?

விடை— சத்தைசொரூபம், சர்வரூபத்தை விட்டிராதாகையாலும், குணிரூபம், குணத்தை விட்டிராதாகையாலும், ஏகதேசமாகையாலும், சத்தையாஞானம், சத்தையுடன் ஞானஞ் சம்பந்தித்திருக்கையாலுங் கூடாது. பாவலட்சணம், அசத்தாய்ப்போகாம லுண்டென்று விளங்குகையாற் கூடும்.

வினா— சித்து தரிசனமென்பது, விஸ்வவியாபகசித்தோ, ஏகதேசசித்தோ, நிர்மலசித்தோ, பிரகாசசித்தோ, வியாபகசித்தோ?

விடை — விஸ்வ வியாபகசித்து விஸ்வ மிருக்கையாலும், ஏகதேசசித்து ஏகதேச மாகையாலும், நிர்மலசித்து மாயாலட்சண மாகையாலும், பிரகாசசித்து சிற்சத்திலட்சண மாகையாலுங் கூடாது. வியாபகசித்து பரிபூரணமாகையாற் கூடும்.

வினா — ஆனந்த தரிசனமென்பது, நிவிர்த்தியானந்தமோ, வித்தியானந்தமோ, சுத்தானந்தமோ, காருண்யானந்தமோ, கீர்த்தியானந்தமோ, லயானந்தமோ, நிரதிசயானந்தமோ?

விடை — நிவிர்த்தியானந்தம், துக்க நிவிர்த்தியாகையாலும், வித்தியானந்தம், சர்வஞ்ஞத்வ மாகையாலும், சுத்தானந்தம், மலநிவிர்த்தி சுகமாகையாலும், கீர்த்தியானந்தம், நிலைமையானந்த மாகையாலும், லயானந்தம், உபசங்கார மாகையாலுங் கூடாது. நிரதிசயானந்தம ஒழிவற்ற வானந்தமாகையாற் கூடும்.

வினா — பரப்பிரம தரிசனமென்பது, லயபரவசமோ, தமோபரவசமோ, பரிபாகபரவசமோ, தரிசனுபரவசமோ, மேலீடு பரவசமோ, ஆனந்தபரவசமோ?

விடை — லயபரவசம், நிவிர்த்திபரவச மாதலாலும், தமோபரவசம், மக்கினமாதலாலும், பரிபாகபரவசம், சத்திநிபாத மாதலாலும், தரிசனுபரவசம், தியானபரவச மாதலாலும், மேலீடுபரவசம், அநித்தபரவச மாதலாலும் கூடாது. ஆனந்த பரவசம், அடுத்த தரிசனமாதலாற் கூடும்.

வினா — சர்வசாட்சி தரிசனமென்பது, சர்வவிடயசாட்சியோ, சர்வசைதன்யசாட்சியோ, அந்தர்முகத்திரிபுடி சாட்சியோ, பகிர்முகத்திரிபுடிசாட்சியோ, சர்வவியாபகசாட்சியோ?

விடை— சர்வவிடயசாட்சி, விடயமில்லாதாகையாலும், சர்வசைதன்யசாட்சி, நானாசைதன்யமில்லையாகையாலும், அந்தர்முகத்திரிபுடிசாட்சி, சுத்தமுதலானதில்லையாகையாலும், பகிர்முகத் திரிபுடிசாட்சி, சச்சிதானந்தமில்லையாகையாலுங் கூடாது. சர்வவியாபக் சாட்சி பூரணஞானமாகையாற் கூடும்.

வினா— சுத்ததரிசனமென்பது, சத்ரூபமற்றசுத்தமோ, அபாவ அசுத்தாபாவசுத்தமோ, துக்காபாவசுத்தமோ, ஆனந்தபாவசுத்தமோ, சங்காரசுத்தமோ, சர்வநேதிசுத்தமோ?

விடை— சத்ரூபமற்றசுத்தம், சத்ரூபலயத்திற் சித்ரூபப்பிரகாசமாகையாலும், அபாவ அசுத்தபாவசுத்தம், பிரபஞ்சவிடுதலைச் சுத்தாகையினாலும், துக்காபாவசுத்தம், துக்கநிவிர்த்தியிற்சுகஞ் ஜெனிக்கையாலும், ஆனந்தபாவசுத்தம், ஆனந்தலயத்தில் துக்கஞ் செனிக்கையாலும், சங்காரசுத்தம், பிராயச்சித்தமாகையாலுங் கூடாது. சர்வநேதிசுத்தம், சமாதியிற் சுத்தத்திற்குக் கீழ்ப்பட்டதெல்லாந் தள்ளப்படுகையாற் கூடும்.

வினா— சூன்யதரிசனமென்பது, மகாசூன்யமோ, சூன்யாசூன்யமோ, லயசூன்யமோ, நிராலம்பசூன்யமோ, மோகாந்தகாரசூன்யமோ, சுத்தசூன்யமோ?

விடை— மகாசூன்யம், சூன்யமேலிடின்மையாலும், சூன்யாசூன்யம், சூன்யத்திற்குமேற் சூன்யமின்றாதலாலும், லயசூன்யம், சூன்யலயமில்லாதாகையினாலும், தமோசூன்யம், மக்கினமாகையாலும், நிராலம்பசூன்யம், நிர்மலவிருத்தியிருக்கையாலும், மோகாந்தகாரசூன்யம், மயக்கமிருக்கையாலும் கூடாது. சுத்தசூன்யம், அடுத்த சுத்தலயத்திற் சூன்யமாகையாற் கூடும்.

வினா — சுபாவதரிசனமென்பது, நிற்சுபாவமோ, சத்தியசுபாவமோ, சுத்தபாவமோ, தத்தர்மசுபாவமோ, உபாதிசுபாவமோ, சூன்யசுபாவமோ?

விடை — நிர்ச்சுபாவம், மந்தமாகையாலும், சத்தியசுபாவம், அசத்திய லயத்திலுண்டாகையாலும், சுத்தசுபாவம், அசுத்தபாவலயத் துண்டாகையாலும், தத்தர்மசுபாவம், தற்காரியமாகையாலும், உபாதிசுபாவம், அசுத்தசாத்திகமகையாலுங் கூடாது. சூன்யசுபாவம், சமாதியிற் சுபாவத்திற் கடுத்ததாகையாற் கூடும்.

வினா — ஒழிவுதரிசனமென்பது, சூன்யமொழிவோ, துக்காபாவவொழிவோ, உபசாந்திவொழிவோ, வியாபகலயவொழிவோ, வாசனைவொழிவோ, ஆரூடவொழிவோ, சுத்தமொழிவோ, அதீதவொழிவோ, சர்வவொழிவோ?

விடை — சூன்யவொழிவு, சூன்யத்திற்குவேறு ஒழிவில்லையாகையாலும், துக்கபாவவொழிவு, துக்கநிவிர்த்தியிற் சுகோதயமாகையாலும், உபசாந்திவொழிவு, சாத்திகமாகையாலும், வியாபகலயவொழிவு, வியாபகலயத்தில் வியாப்பியவுதயம் பரிச்சின்னமாதலாலும், வாசனைவொழிவு, விருத்திலயமாகையாலும், ஆரூடவொழிவு, ஒழிவுநீக்கமுண்டாகையாலும், சுத்தவொழிவு, அசுத்தலயவொழிவாகையாலும், அதீதவொழிவு, அதீதத்திற்கொழிவில்லையாகையாலுங்கூடாது. சர்வவொழிவு, ஒழிவிலொன்றுமில்லையாகையாற் கூடும்.

வினா — அதீததரிசனமென்பது, சர்வதாதீதமோ, சர்வலயாதீதமோ, லட்சணாதீதமோ, சொரூபாதீதமோ, சுத்தாதீதமோ, சர்வதுக்காதீதமோ, சுகாதீதமோ, அந்தர்முகத்திரிபுடிஞானமோ, பகிர்முகத்திரிபுடி ஞானமோ, சுவானுபவலயாதீதமோ?

விடை — சர்வாதீதம், ஒழிவிற் சர்வமுமில்லையென்றால் ஒழிவதீதத்திற் சர்வமும் வரக்கூடாதாகையாலும், சர்வலயாதீதம், மேற்பொருளிருக்கையாலும், லட்சணாதீதம், லட்சணதரிசனங் கீழ்ப்பட்டதாகையாலும், சொரூபாதீதம், சொரூபாதீதலட்சணங் கீழ்ப்பட்டதரிசனமாதலாலும், சுத்தாதீதம், யதார்த்தமாதலாலும், சர்வதுக்காதீதம், துக்காதீதத்திற் சுகாதீதமுதயமாகையாலும், சுகாதீதம் பரவசமாகையாலும், அந்தர்முகத்திரிபுடிஞானம், இந்தச்சமாதி யதீதலயமாகையாலும், பகிர்முகத்திரிபுடிஞானம், அதீததரிசனத்தில் சுத்தமுதலியதிரிபுடியின்மையினாலுங் கூடாது. சுவானுபவலயாதீதம், ஒழிவுக்குமப்பாற்பட்ட வதீதமாகையாற் கூடும்.

வினா — யதார்த்ததரிசனமென்பது, இதரயதார்த்தமோ, சுத்தயதார்த்தமோ, சமரசயதார்த்தமோ, மக்கினயதார்த்தமோ, அதீதலய யதார்த்தமோ?

விடை — இதர யதார்த்தம், விடயசம்பந்தமாகையினாலும், சுத்த யதார்த்தம், ஆரூடமாயிராமல் விடுதலும் பற்றுதலுமா யிருக்கையினாலும், சமரசயதார்த்தம், தள்ளப்படுகையினாலும், மக்கினயதார்த்தம், தமசாகையினாலுங் கூடாது. அதீதலயயதார்த்தம், அதீதலயமானவுடன் ஆடுத்தாற்போல் யதார்த்தம் வருகையாற் கூடும்.

வினா — இரகசியதரிசனமென்பது, பரமரகசியமோ, அனுபவாதீத ரகசியமோ, அகோசரரகசியமோ, குய்யாகுய்யரகசியமோ, சர்வாபாவரகசியமோ, அதிசயரகசியமோ?

விடை — பரமரகசியம், பராமர்சப்படி யொழுங்காகையாலும், அனுபவாதீதரகசியம், அதிசயானுபவமிருக்கையாலும், அகோசரரகசியம், அகோசரமற்றதாகையாலும், குய்யாகுய்ய ரகசியம்,

ரகசியத்திற்கும் ரகசியமில்லையாகையாலும், சர்
வாபர்வரகசியம், மேற்பொருளிருக்கையினாலும்
கூடாது. அதிசயரகசியம், இரகசியத்திலதிசயம்
வருகையாற் கூடும்.

வினா— அறுதிதரிசனமென்பது, அமூர்த்தவறுதியோ,
உன்முகவறுதியோ, வடிவறுதியோ, வாசனைவறு
தியோ, அநுபவ வறுதியோ, மக்கினவறுதியோ,
அதிசயவறுதியோ?

விடை— அமூர்த்தவறுதி, பதமூர்த்திருக்கையினாலும்,
உன்முகவறுதி, உன்முகமில்லை யாகையினாலும்,
வடிவறுதி, கீழ்ப்படி யொழுங்காகையாலும், வா
சனைவறுதி வாசனையொழிவிற்போகையாலும் மக்
கினவறுதி, அஞ்ஞானசமரசமாகையாலும் கூடா
து. அதிசயவறுதி, இதற்கடுத்ததில்லையாதலாற்கூடும்.

வினா— ஒடுக்கதரிசனமென்பது, சர்வலயவொடுக்க
மோ, சொரூபவொடுக்கமோ, உன்முகவொடுக்
கமோ, வாசனாதீத வொடுக்கமோ, கவனவொடுக்
கமோ, சர்வவொழி வொடுக்கமோ?

விடை— சர்வலயவொடுக்கம், மேற்பொருளிருக்கை
யாலும், சொரூபவொடுக்கம், சொரூபலட்சணை
தீதங் கீழ்ப்பட்டதாகையாலும், உன்முகவொடுக்
கம், இதற்கு உன்முகாவுன்முகமில்லையாகையா
லும், வாசனாதீதவொடுக்கம், வாசனைபோனது
கீழ்ப்பட்டதாகையாலும், கவனவொடுக்கம், கா
ணாசங் கீழ்ப்பட்டதாகையாலுங் கூடாது. சர்
வவொடுக்கம், சர்வவொழிவு மொடுங்கினதாகை
யாற் கூடும்.

வினா— மோனதரிசனமென்பது, சொல்லிறந்தமோன
மோ, வாசனாதீதமோனமோ, மூகைமோனமோ,
அநுபவலயமோனமோ, முத்திராமோனமோ,
சர்வமுத்திலயமோனமோ, தன்மயமோனமோ,
சர்வலயமோனமோ?

விடை—சொல்லிறந்தமோனம், ஒழிவுதரிசனத்தினீங்கலாலும், வாசஞதீதமோனம், இரகசியதரிசனத்தினீங்கலாலும், மூகைமோனம், மாயாலட்சண மாதலாலும், அனுபவலயமோனம், இழ்ப்பட்ட சமாதியாகையாலும், முத்திரமோனம், கைகாட்டாகையாலும், சர்வமுத்திலயமோனம், சாருவாகன்மதமாகையாலும், தன்மயமோனம், ஆத்மதரிசனமாதலாலுங்கூடாது. சர்வலயமோனம், மோனத்திற் சர்வலயமாகையாற் கூடும்.



## சம்பந்தம்.



வினா—இவ்விருபத்தைந்து படியொழுங்கிற்குஞ் சம்பந்த மெப்படி?

விடை—தூலசரீரம் கிரியாசம்பந்தம், சூட்சுமசரீரம் விடயசம்பந்தம், காரணசரீரம் அகங்காரசம்பந்தம், சீவன்சித்தசம்பந்தம், சாட்சிபுத்திசம்பந்தம், விராட்டுபோகசம்பந்தம், இரணியகர்ப்பம் விட்சேபசம்பந்தம், மாயைமோகசம்பந்தம், ஈஸ்வரன் இச்சாஞானக்கிரியாசம்பந்தம், பிரமம்ஞானசம்பந்தம், சத்து சத்தியசம்பந்தம், சித்து வித்தியாசம்பந்தம், ஆனந்தம் நிவிர்த்திசம்பந்தம், பரப்பிரமம் ஆனந்தசம்பந்தம், சர்வசாட்சி நிற்சத்திசம்பந்தம், சுத்தம் நேதிசம்பந்தம், சூன்யம் லயசம்பந்தம், சுபாவம் தன்மயசம்பந்தம், ஒழிவு உபாதி சம்பந்தம், அதீதம் கேவல சம்பந்தம், யதார்த்தம் வாசஞதியசம்பந்தம், இரகசியம் அதிசயசம்பந்தம், அறுதி நிலையற்றசம்பந்தம், ஒடுக்கம் ஒழிவுசம்பந்தம், மோனம் சர்வாபாவசம்பந்தம், மோனுதீதம் ஒருசம்பந்தமுமின்றித்தானே தானுயிருக்கும்.



## பகிர்முகம்-அந்தர்முகம்.

வினா — இவ்விருபத்தைந்து படியொழுங்கிற்கும் பகிர்முகமந்தர்முக மெப்படி?

விடை — தூலசரீரத்திற்குப் பகிர்முகம் கிருத்தியம், அந்தர்முகம் நிஷ்கிரியை, சூட்சும சரீரத்திற்குப் பகிர்முகம் பஞ்சவிடயம், அந்தர்முகம் சித்தசஞ்சலம், காரணசரீரத்திற்குப் பகிர்முகம், தத்துவந்தெரியாது மறைந்தது, அந்தர்முகம், அந்தகாரம், சீவனுக்குப் பகிர்முகம், கரணேந்திரியசகாயமாய் விடயத்தைப்புசித்தல், அந்தர்முகம் அறிவுமாத்திரமாயிருத்தல், சாட்சிக்குப் பகிர்முகம், விடயம், விருத்திசிவன், அந்தர்முகம், நிராகாரம், நிர்விஷயம், நிர்மலம், விராட்டுக்குப் பகிர்முகம், வியட்டி, அந்தர்முகம், சமட்டி இரணியகர்ப்பத்திற்குப் பகிர்முகம் தன்மாத்திரை, அந்தர்முகம் விட்சேபசத்தி, மாயைக்குப் பகிர்முகம் சாவஞ்ஞத்வம், அந்தர்முகம் படிகவர்ணசொரூபம், ஈஸ்வரனுக்குப்பகிர்முகம் இச்சாஞானக்கிரியாசொரூபம், அந்தர்முகம் ஞானசொரூபம், பிரமத்திற்குப்பகிர்முகம், இச்சாஞானக்கிரியாதிரிபுடிசாட்சி, அந்தர்முகம் சச்சிதானந்தத்திரிபுடிசாட்சி, சத்துக்குப்பகிர்முகம் உண்டென்றுவிளங்குதல், அந்தர்முகம் சத்தை, சித்துக்குப் பகிர்முகம் அகண்டசித்து, அந்தர்முகம் சின்மயம், ஆனந்தத்திற்குப் பகிர்முகம் நிரதிசயானந்தம், அந்தர்முகம் திருப்தி, பரப்பிரமத்திற்குப் பகிர்முகம் ஆனந்தபரவசம், அந்தர்முகம்பரவசகேவலம், சர்வசாட்சிக்குப்பகிர்முகம் சச்சிதானந்தத்திரிபுடிசாட்சி, அந்தர்முகம் சுத்தசூனியசுபாவத்திரிபுடிசாட்சி, சுத்தத்திற்குப்பகிர்முகம்சுத்தபாவம், அந்தர்முகம் சத்திலயிக்கம், சூனியத்திற

குப்பகிர்முகம் சித்திலயம், அந்தர்முகம் லயாதீதம், சுயாவத்திற்குப் பகிர்முகம் ஆனந்தாதீதம், அந்தர்முகம் ஆனந்தாயிக்யம், ஒழிவுக்குப் பகிர்முகம் ஆனந்தபாவசலயம், அந்தர்முகம் லயகேவலம், அதீதத்திற்குப் பகிர்முகம் சுத்தாத்திரிபுடிசாட்சி, அந்தர்முகம் யதார்த்தாதித்திரிபுடிசாட்சி, யதார்த்தத்திற்குப் பகிர்முகம் தற்சுபாவம், அந்தர்முகம் சர்வலயசமம், இரகசியத்திற்குப் பகிர்முகம் அதிசயம், அந்தர்முகம் பரமரகசியாதீதம், அறுதிக்குப் பகிர்முகம் வாசனலயம், அந்தர்முகம் வாசனாதீதம், ஒடுக்கத்திற்குப் பகிர்முகம் சர்வலயவுன்முகம், அந்தர்முகம் உன்முகலயம், மோனத்திற்குப் பகிர்முகம் யதார்த்தாதித்திரிபுடிசாட்சி, அந்தர்முகம் நிஷ்டையின்மையாதித்திரிபுடிசாட்சியென்றறிக.



## மௌனாதீதத்தன்மயத்திற்குப்
## பகிர்முகம் - அந்தர்முகம்.



வினா—மௌனாதீதத்தன்மயத்திற்குப் பகிர்முகமந்தர்முக மெப்படி?

விடை—இரச்சுவென்று கண்டவுடனதைத்தவிரச்சர்ப்பமில்லாதுபோலும், சிப்பியென்று கண்டவுடன் வெள்ளியில்லாதுபோலும், கட்டையென்று கண்டவுடன் கள்ளனில்லாதுபோலும், சலமென்று கண்டவுடன் எரி குளம் மடு வில்லாது போலும், மரமென்று கண்டவுடன் ஆனை முதலிய தில்லாதுபோலும், ஆகாசமென்று கண்டவுடன் நீலநிறம் ஆகாயபுஷ்பம் கடாகாசம் மடாகாசமுதலிய பலசித்திரங்களில்லாதுபோலும் - மிருத்திகையென்று கண்டவுடன் கடகலசாதிகளும் - பொன்னென்று கண்டவுடன் ஆவரணவு

ளைகளும்-வந்நியென்று கண்டவுடன் நானுபுத்திர
ரும் - சலமென்று கண்டவுடன் நானுரசவன்ன
மும் - சங்கென்று கண்டவுடன் பொன்வன்ன
மும் - படிகமென்று கண்டவுடன் சிவப்புகறுப்பு
முதலிய பலநிறமும் - அக்கினியென்று கண்டவு
டன் பேதவக்கினிகளும்-சந்திரனென் றென்றறி
ந்தவுடன் இரண்டு சந்திரனும் - தொனியான
தென்றறிந்தவுடன் நானுவர்ண ராகவாக்கியங்க
ளும்-சுசாதியான தென்றறிந்தவுடன் நானுரூப
வர்ணங்களும் - சூரியன் பல பாண்டசலத்திற்
பலவாகத்தோற்றினு மொன்றென்றறிந்தவுடன்
இரண்டு சூரியனும் - லக்கம்பலவாகுலும் பிங்
தொன்றொழிய விரண்டில்லாதுபோலும்-சமாதி
களும்நானுவாயிருபத்தைந்துபடி யொழுங்காய்த்
தோற்றினலும் அதுகள் தன்னைத்தவிர இல்லை
யென்றிருப்பதே பகிர்முகம் - அன்றியும் எல்லா
வற்றிற்கு மப்பாற்பட்ட விலட்சணமான தானே
தானுயிருப்பதே அந்தர்முகமென்றறிக.



## அயிக்யதாதாத்மியம்.

வின = இவ்விருபத்தைந்து படியொழுங்கிற்கு மொன்
றோடொன்றயிக்ய தாதாத்மிய மெப்படி?

விடை = தூலசரீரமுஞ் சூட்சுமசரீரமும் உடலு முயி
ரும்போலும், சூட்சுமசரீரமுங் காரண சரீரமும
மோகமு மோகியும் போலும், காரணசரீரமுஞ்
சீவனும் சலமும் பிரதிபிம்பமும் போலும், சீவ
னுஞ்சாட்சியும், சலப்பிரதி பிம்பமும் சூரியனும்
போலும், சாட்சியும்விராட்டும் தீபப்பிரபையும்
கட படாதிகளும்போலும், விராட்டும் இரணிய
கர்ப்பமும், கதலித்தண்டும்மட்டையும்போலும்,
இரணிய கர்ப்பமும், மாயையும், வாய்வுமாகா

சமும் போலும், மாயையு மீசுரனும் கண்ணாடி-
யும், சூரியப் பிரதிபிம்பமும்போலும், ஈசுரனும்
பிரமமும், பிரதி பிம்பமும், சூரியனும்போலும்
பிரமமுஞ் சத்தும் கோவுமி லட்சணமும் போ
லும், சத்தும் சித்தும் பிரபஞ்சமுஞ் சூரியப்பிர
பையும் போலும், சித்தும், ஆனந்தமும், சுகியுஞ்
சுகமும் போலும், ஆனந்தமும், பரப் பிரமமும்
மோச்சிதனும், மோச்சையும் போலும், பரப்பிர
மமுஞ், சர்வசாட்சியும், பரவசனும், அவனையறி
வானும்போலும், சர்வசாட்சியும், சுத்தமும்பிரா
யச்சித்தவானும் - பிராயச்சித்தமும் போலும், சு
த்தமுஞ் சூனியமு முயலுங் கொம்பும்போலும்-
சூனியமுஞ் சுபாவமும் பொய்யும் பொய்யென்
றே தசத்தியமெனுஞ் சொல்லும்போலும், சுபா
வமு மொழிவும்நாதமும்,நாதவொடுக்கமும் போ
லும்-ஒழிவு பதீதமும் - நாதமும், நாதலயமும்
போலும்- அதீதமும்-யதார்த்தமும்-கன்மமுடிவு
மதின் பலமும் போலும்- யதார்த்தமும்-ரகசிய
மும்- வசிஷ்டரு மருந்ததியும் போலும், ரக
சியமு மறுதியும்- அருந்ததியுங் கற்பும் போலும்
அறுதியு மொடுக்கமும்- செல்வமும்- காஞ்சன
மும் போலும்- ஒடுக்கமும் - மோனமும்- வேத
மும்- பொருளும் போலும் - மோனமும்-மோன
தீதமும்- ஊமனும்-ஊமன்கனவும் போலு மென
றறிக.

## முத்திபேதம்.

வினா — ஐந்துபதத்திலும் வாச்சிய மைந்து லட்சிய
மைந்து ஆகபத்திற்கு முத்திபேத மெப்படி?

விடை — தொம்பதவாச்சிய நீங்கித் தாதாத்மியம்பே
றதில் தாதாத்மியமுத்தனென்றும் - தொம்ப

தலட்சியமான சாட்சிதானாய் ஜீவித்திருக்கையில் முத்தனானபடியினால் ஜீவன்முத்தனென்றும்- தற்பதவாய்ச்சிய நீங்கித்தத்துவ நீங்கினபடியினால் தத்துவ முத்த னென்றும்- தற்பத லட்கியமான பிரமந்தானாய் தேகாதிப்பிரபஞ்ச மில்லாதபடியினால் விதேக முத்தனென்றும்- அசிபதவாச்சிய நீங்கி லட்சணம் போனபடியால் லட்சண முத்தனென்றும் - அசிபத லட்சியமான சர்வ சாட்சிதானாய் ஒருலட்சணமு மில்லாத படியினால் லட்சண சூன்ய கைவல்ய முத்தனென்றும் - அதிபதவாச்சிய நீங்கி லட்சியம் போனதினால் லட்சிய முத்தனென்றும்- அதிபதலட்கியமான அதீத சாட்சிதானாய் லட்சியாதீத மானகையினால் அதீத முத்தனென்றும் - நிசபாத வாச்சியநீங்கி வாசனை நீங்கினபடியால் வாசனா முத்த னென்றும் - நிசபத லட்சியமான மோனந்தானாய் வாசனாதீத மானபடியினால் மோன முத்தனென்றும் - மோனாதீதந் தானாய் மோன நீங்கினபடியினால் சர்வயோன்னத முத்தனென்று மறிக.

வினா = நீர்சகலசமய சாஸ்திர கர்த்தாக்களு மங்கீகரித்த சைதன்ய நிலைகளைப் பொருளல்ல வென்று தள்ளுவதென்னை?

விடை = மோனாதீதவஸ்துவுக்கு மற்றதெல்லாம் முப்பத்திரண்டு லட்சணங்களால் அதுகள் பொருளல்ல வென்று தள்ளப் பட்டனவென்றறிக.

## முப்பத்திரண்டு லட்சணம்.

வினா = முப்பத்திரண்டு லட்சணமாவ தெப்படி?

விடை = அசத்தியம் - சடம் - துக்கம் - பரிச்சின்னம் - அனித்தியம் - மோகம் - நிவிர்த்தி - ஆனந்தம் - பா

வனே = தாதாத்மியம்-சொரூபம் = பிரபஞ்சலட்ச
ணம்=அசுகசம் - பிரதக்கு-சித்தி=சேஷம் = மூலம்=
மாயை=கன்மம் - தூலம்-சூட்சுமம்-காரணம்=உற்
பத்திலயம்=மித்தை பிரத்தியட்சம்-அனுமானம்=
உவமானம் = சத்தம்=அருத்தாபத்தி = அபாவம்=
ஐதீகம்-சம்பவம்-என முப்பத்திரண்டு லட்சண
ங்களாம்.

வினா — இந்த முப்பத்திரண்டு லட்சணமும் இதற்கு
விலட்சணமான மோனாதீதவஸ்து லட்சணமும்
புலப்படச்சொல்லவேண்டும் ?

விடை — ஆசிரியர் ஒருமொழிவாக்கிய முபதேசிக்கும்
போது சீஷன் எதைத் தானென்ற வஸ்துவாய்க்
கொள்ளுவதென்று கேட்க. ஆசிரியர் முப்பத்தி
ரண்டுலட்சணமுமுள்ளது இது-இந்தலட்சணங்
களுக்கு விலட்சணமானவஸ்து அது - அதுவே
தானாயிருக்கு மௌனாதீதநிலையென்று அனுக்கிர
கஞ்செய்தருளினார். ஆதலால் மேற்சொல்லிய
படி யொழுங்கு இருபத்தைந்தும் ஒன்றுகண்டா
லொன்றுகாணாதபடியினால் அசத்து-அதுசத்து-
இவ்விருபத்தைந்தும் ஞானங்கூடினாற்றோற்றித்
தொழிற்படும் ஞானங்கூடாதபோது தோற்றா
வுந் தொழிலுமில்லையாகையால் சடம்-அதுசித்
து-இவ்விருபத்தைந்தும் அனாதிபழக்கமான பிர
பஞ்சவாசனையைவிட்டு வருத்தமாய்ச்சமாதி சா
திக்கையினால் துக்கம்-அது சுகசொரூபம் - இவ்
விருபத்தைந்தும் ஒன்றுபோலிராமற்பேதாபேத
மாயிருப்பதாற்பரிச்சின்னம் அது - பரிபூரணம்-
இவ்விருபத்தைந்தும் சமாதியில் விளங்கி மற்ற
வேளையி லில்லாதாகையால் அநித்தியம் - அது
நித்தியம் - இவ்விருபத்தைந்தும் தானாயிருந்தந்
தானாகாமல் ஆனவனுக்கு அன்னிய மாகையால்
அன்னியம்-அது அனன்னியம்-இவ்விருபத்தைந்
துமறிவதற்குமோகத்தைக்கொடுக்கையால் மோ

கம்-அது மோகம் = பிரபஞ்சந்துக்கமென்றறிந்து
அதைநிவிர்த்திக்கும்பொருட்டுஇவ்விருபத்தைந்
து சமாதியிலும்பழகிச் சுகமடைகையால்நிவிர்த்
தியானந்தம்- அது ஆனந்தாதீதம் = இவ்விருபத்
தைந்துங் குருமுகமாய்க்கேட்டுப்புத்திவிருத்தி
யிற்றோற்றுகையால் பாவனை = அதுபாவனாதீதம் =
இவ்விருபத்தைந்தும் தானான தாதாத்மியமாத
லால் தாதாத்மியம்-அது தாதாத்மிய நிவிர்த்தி-
இவ்விருபத்தைந்தும் நாமரூபத்துடன் சொரூ
பப் பிரபஞ்சமாகையால் சொரூபப் பிரபஞ்சம்-
அது சொரூபப்பிரபஞ்சாதீதம்=இவ்விருபத்தைந்
தும் லட்சணத்துடன் கூடியிருக்கையால் லட்
சணம்-அது லட்சியம்=இவ்விருபத்தைந்தும் சமா
தியில்லாதபோது விளங்காதாகையால் அசகசம்-
அதுசகசம்=இவ்விருபத்தைந்தும்ஒன்றோடொன்
று கூடாதாகையால் பிரதக்கு = அது அப்பிர
தக்கு-இவ்விருபத்தைந்தும் சமாதிசாதனையாதி
யிற் சித்திக்கையால் சித்தி = அது சித்திவிலட்ச
ணம்-இல்விருபத்தைந்தும் நேதி = நேதியென்று
தள்ளப்படுகையால் சேஷம் = அது அசேஷம்-
இவ்விருபத்தைந்தும் ஞானபாவத்தில் மறைப்பா
கையால் மலம்-அது அமலம் = இவ்விருபத்தைந்
தும் யதார்த்த வஸ்துவை விட்டு மயக்கத்தினா
லிதுகளே பொருளாய்த் தோற்றுகையினால் மா
யை - அது மாயாரகிதம் = இவ்விருபத்தைந்தும்
ஒன்றை நீக்கிக்கொண் டொன்றிற்பற்றுகையால்
கன்மம் = அது அகன்மம் = இவ்விருபத்தைந்தும்
மேற்பொருளுக்குத்தனுவாகையால்தூலசரீரம்-
அது தூலவிலட்சணம் = இவ்விருபத்தைந்தும்
கீழ்ப்பட்ட பொருளுக்கடுத்து மேற்பட்டுள்ள
தாகையால் சூட்சுமசரீரம் - அது சூட்சுமாசூட்
சுமவிலட்சணம்-இவ்விருபத்தைந்து மொன்றுக்
கொன்று காரணமாகையால் காரணம்-அது கார

ணகாரணவிலட்சணம்-இவ்விருபத்தைந்தும் தரி
சனவெளியி லுற்பத்தியும மற்றவெளியில் லய
முமாகையால் உற்பத்திலயம்-அது உற்பத்திலய
விலட்சணம் = இவ்விருபத்தைந்து மேற்பொரு
ளிற்கானற்சலம்போற்றோற்றுகையால் மித்தை-
அது மித்தையாவிலட்சணம் = இவ்விருபத்தைந்
தும் சமாதியில் ஞானப்பிரத்தியட்சமாகையால்
பிரத்தியட்சம்-அது பிரத்தியட்சாதீதம் = இவ்
விருபத்தைந்தும் மலநீப்பு நீக்கத்திற் பதார்த்
தந் தோற்றுகிறதுபோ லஞ்ஞான நீக்கத்திற்
றோற்றுமென்றறிகையால் அநுமானம்-அது அநு
மானவிலட்சணம் = இவ்விருபத்தைந்தும் குரு
வாக்கியவுவமானப்படி பாவிக்கச்சித்திக்கையால்
உவமானம்-அது உவமானரகிதம் = இவ்விருபத்
தைந்தும் வேதாகமவசனப்படி விளங்குகையால்
சத்தம்-அது வேதாகமாதீதம் - இவ்விருபத்தைந்
தும் இன்னலட்சண மிதற்கிருக்குமெனக்கேட்டு
அன்னலட்சணம் அதற்கிருக்கக்கண்டறிகையால்
அருத்தாபத்தி = அது அருத்தாபத்தி விலட்ச
ணம்-இவ்விருபத்தைந்தும் யுத்தி கற்பிதத்தாற்
றோற்றுவதன்றிக் காலத்திரயத்திலு மில்லையா
கையால் அபாவம்-அது பாவாபாவவிலட்சணம்-
இவ்விருபத்தைந்தும் பரம்பரையாய்க் கேட்டறி
கையால் ஐதீகம் = அது ஐதீகவிலட்சணம் = இவ்
விருபத்தைந்தும் ஐந்து பதத்துள் நான்கு பத
மும்-நான்கினுள் மூன்றுபதமும் - மூன்றினுள்
இரண்டுபதமும் - இரண்டினுள் ஒருபதமுமிருக்
கையால் சம்பவம்-அது சம்பவாதீதமென்றறிக.
ஆதலால் இதுவென்றது = வாச்சியவாக்கியம்.
அதுவென்றது-அவாந்தரவாக்கியம். நீயென்றது
மகாவாக்கியம். இவற்றுள் அசம்பாவனை விபரீத
பாவனை நீங்குபடி ஸ்ரீசற்குருவுக்குச்சிசுருஷை
செய்து அவரது பரிபூரண கிருபாகடாட்ச வீட்

சணயத்திறற் றெளிந்து சாட்சாத்காரமானது நிவிர்த்திவாக்கியமென்றறிக வென்று ஸ்ரீகயிலாசபதியாகிய ஸ்ரீ தட்சிணமூர்த்திசுவாமிகள் சனகாதிகள் நால்வருக்குந் திருவுளம்பற்றியருளினார். கேட்டீர்களோ நைமிசாரண்ய வாசிகளாகிய முனிவர்களே யென்று சூதமகாமுனிவர் திருவாய்மலர்ந்தருளினார்.

## குருஸ்துதி.

### கட்டளைக்கலித்துறை.

ஐவகைத் தூலமுஞ் சூட்சுமகாரண மாமவிவு [கா
மெய்வகைச்சாட்சியோ டாந்துமறிவித்து மென்னைப
வுய்வகையாயதுரீயொன்றோர்வார்த்தையொருமொழி
கைவசமாக வருள்சவுபாக்கிய காரணனே. [யைக்

### வெண்பா.

அதுவதுவாய் நின்ற வனுபவங்க ளைம்பந்
ததுவதுவாய் நின்றறிவித் தன்றி — யதுவதுவுந்
தானல்லால் வேறில்லை யென்றான் றனிநின்ற
தானறிவா னந்தனென்கோன் றான்.

## பஞ்சபதமகாவாக்கியம்

## முற்றுப்பெற்றது.



௨

சிவமயம்.

# பஞ்சபதமகாவாக்கிய வகராதி.

வாக்கியம். பக்கம்.

# அகராதி



பஞ்சபதமகாவாக்கியவகராதி

முற்றுப்பெற்றது.



